


# நீங்கள் எங்கிருந்தாலும்...

# ஹிமாலயா புக்கே ஸ்நோ

# உபயோகியுங்கள்.




**ஏனென்றால் இது பிரத்தியேகமாக இந்தியாவின் சீதோஷ்ணத்திற்கேற்ப தயாரிக்கப்பட்டது**

சீதோஷ்ண நிலை எப்படி இருந்தாலும்—இந்தியாவில் நீங்கள் எங்கிருந்தாலும், ஹிமாலயா புக்கே ஸ்நோ உங்கள் சருமத்தை அதிக மிருதுவாகவும், அழகாகவும் வைத்துக்கொள்கிறது. இதன் நறுமணத்தை நீங்கள் மிகவும் விரும்புவீர்கள்.

இன்னுமொரு நேர்த்தியான இராஸ்மிக் தயாரிப்பு

HBS. 6A-X30 TM

இராஸ்மிக் கம். லிட். லண்டனுக்காக இந்தியாவில் தயாரித்தது.

# கல்கி பொருளடக்கம்

மலர் 12
இதழ் 8

1952 செப்டம்பர் 21

நந்தன ௵
புரட்டாசி 6



**"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.**

கல்கி

மலர் 12 | தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 8

# ஐக்கியத்துக்குக் கொடுத்த விலை!

இந்தூரிலே, சில நாட்களாக அரசியல் வானில் கருமேகங்கள் குமுறிக் கொண்டிருந்தன. புயல் வீசக்கூடும் என்றும் சிலர் கருதினர்.

ஆனால் அதிர்ஷ்டவசமாக அத்தகைய உற்பாதங்கள் எதுவும் ஏற்படவில்லை.

அங்கு நிகழ்ந்த அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் எதிர்பார்த்ததற்கு மாறாகச் சுமுகமாகவும் வெற்றிகரமாகவும் முடிந்தது.

காங்கிரஸ் அமைப்பு சம்பந்தமான திருத்தங்கள் ஆலோசனைக்கு வந்த மேற்படி கூட்டம் சுமுகமாக முடிவுற்றது எனில், அது அற்ப சொற்பமான விஷயம் அல்ல.

அவ்விஷயமாக ஏதாவது தகராறு ஏற்படுமோ என்றுதான், சென்ற அ. இ. கா. கமிட்டிக் கூட்டத்தில் அந்தப் பிரச்னையை விவாதத்துக்கு எடுத்துக் கொள்ளாமல், அது பற்றிய ஆலோசனையை ஒத்தி வைத்து விட்டார்கள்.

எனவே, இந்தூர்க் கூட்டத்தில் அவ்விஷயமாகத் திருப்திகரமான முடிவு ஏற்பட்டது மிகவும் வரவேற்கத் தக்கதாகும்.

1. காங்கிரஸ் காரியக் கமிட்டியில் இத்தனை மந்திரிகள்தான் இருக்கலாம் என்ற கட்டுப்பாடு எதுவும் இருக்கக் கூடாது. காங்கிரஸ் அக்ராசனருக்குத் தமது இஷ்டப்படிக் காரியக் கமிட்டியை அமைத்துக் கொள்ள உரிமை உண்டு.

2. பார்லிமெண்டிலும் மாகாண சட்ட சபைகளிலும் உள்ள காங்கிரஸ் அங்கத்தினர்களுக்கு, ஆங்காங்குள்ள காங்கிரஸ் கமிட்டிகளிலும் துணை அங்கத்தினர்களாக இருப்பதற்கு உரிமை அளிக்கப்பட்டிருக்கிறது.

காங்கிரஸ் அமைப்புத் திட்டத்தில் செய்யப்பட்டுள்ள திருத்தங்களில் மேலே குறிப்பிட்ட இரு திருத்தங்களும் மிகவும் முக்கியமானவை.

இதுவரையில் காங்கிரஸ் கமிட்டிகளும் சட்ட சபைகளில் உள்ள காங்கிரஸ் கட்சிகளும் தனித் தனிப் பிரிவுகளாக இருந்து வந்தன. ஆனால் இப்போது காங்கிரஸ் அமைப்பில் செய்துள்ள மாறுதலின் பலனாக, அந்த இரண்டு பிரிவுகளும் பரஸ்பரம் ஒத்துழைப்பதற்கு இடம் ஏற்பட்டிருக்கிறது.

ஏற்கெனவே அத்தகைய ஒத்துழைப்பு இராததால்தான், காங்கிரஸ் அக்ராசனர்களாக இருந்த ஆச்சாரிய கிருபளானி கட்சி மாறினார்; ஸ்ரீ புருஷோத்தம தாஸ் தாண்டன் அரசியல் துறவியானார்.

பல மாகாணங்களிலும் காங்கிரஸ் தலைவர்களிடையே அபிப்பிராய பேதங்கள் முளைத்து, ஒற்றுமை குலைந்ததற்கும் அதுதான் காரணம்.

இந்தூரில் நிறைவேறியுள்ள ஏற்பாட்டின் பலனாக, சட்ட சபைகளுக்கு உள்ளேயும் வெளியிலும் இருக்கும் காங்கிரஸ் வாதிகளுக்குள் ஒற்றுமை உண்டாகி, காங்கிரஸ் புதிய பலத்துடன் விளங்கும் என்று எதிர்பார்க்கலாம்.

* * *

பாரத நாட்டில் உள்ள பல்வேறு இடங்களிலும் இன்று பலவிதமான 'ஒழிக'க் கூச்சல்கள் கிளம்பி, காதைத் துளைத்து வருகின்றன அல்லவா?

ராஜப் பிரமுகர்களையும் அவர்களுக்குக் கொடுக்கும் மான்யத் தொகைகளையும் ஒழித்து விடவேண்டும் என்ற கூச்சலும் சமீப காலமாக எழுந்திருக்கிறது.

இந்தியா சுதந்திரம் பெற்றது மாபெரும் விஷயம். அந்தச் சுதந்திரத்தைச் சின்னாபின்னமாக்க முற்படாமல், இந்திய சமஸ்தானங்கள் சுதந்திர இந்தியாவுடன் ஐக்கியமடைய முன் வந்ததும் பெரிய விஷயம் தான்.

இவற்றுடன் ஒப்பிடும் போது ராஜப் பிரமுகர் பதவியோ, அல்லது அவர்களுக்குக் கொடுக்கப்படும் தொகைகளோ அற்ப விஷயங்கள் என்பதை யாரும் ஒப்புக் கொள்வர். அப்படியிருக்க, அதை ஒரு பெரிய பிரச்னையாக மிகைப் படுத்துவோர் இருப்பதாலேயே, அவ்விஷயம் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியிலும் விவாதத்துக்கு வரும்படி நேர்ந்தது.

இந்திய சர்க்கார் ராஜப் பிரமுகர்களுக்கு விசேஷச் சலுகைகள் எதுவும் காட்டவில்லை.

முறை தவறி நடந்து கொண்ட ராஜப் பிரமுகர்கள் விஷயத்தில் கடுமையான நடவடிக்கை எடுத்துக் கொள்ள இந்திய சர்க்கார் சிறிதும் தயங்கியதில்லை.

எனினும் சிலருடைய விருப்பு அல்லது வெறுப்பை மாத்திரம் முக்கியமாகக் கொண்டு, தேசத்தை ஆட்சிபுரியும் சர்க்கார் ஒரு காரியத்தைச் செய்துவிட முடியுமா!

அவ்விஷயம் மேற்படி கமிட்டியின் பரிசீலனைக்கு வந்த போது, பண்டித ஜவாஹர்லால் நேரு வழக்கம் போல் பட்டவர்த்தனமாகத் தமது அபிப்பிராயத்தைத் தெரிவித்தார்.

"ராஜப் பிரமுகர்களுக்குக் கொடுக்கும் மான்யத்தை, இந்தியாவின் ஐக்யத்துக்காகக் கொடுத்த விலை என்று கருத வேண்டும். மேற்படி தொகை பெரியதா, சிறியதா என்பது எனக்குத் தெரியாது. தனிப்பட்ட ராஜப் பிரமுகர்களுக்கு அந்தத் தொகை பெரியதுதான். ஆனால் இந்தியாவின் ஐக்கியத்தை உத்தேசிக்கும் போது அது பெரும் தொகை அல்ல.

"ராஜப் பிரமுகர்கள் என்று இந்தியாவில் எழு எட்டுப் பேர்தான் இருக்கிறார்கள். அவர்களுடன் சுமுகமாகக் கலந்தாலோசித்து ஒரு முடிவுக்கு வரலாம். அவ்விதமின்றி, ராஜப் பிரமுகர்களுக்குக் காலஞ் சென்ற சர்தார் வல்லபாய் பட்டேல் அளித்துள்ள வாக்குறுதியை மீறி ஒரு காரியத்தைச் செய்வது காங்கிரசின் கௌரவத்துக்கும் இந்திய சர்க்காரின் கௌரவத்துக்கும் ஏற்றதல்ல" என்று ஜவாஹர்லால்ஜி கூறிவிட்டார்.

உலகத்திலே மானிட வர்க்கத்தை இடைவிடாது வாட்டி வரும் யுத்த பீதியை ஒழிப்பதற்கு வல்லரசுகள் முன் வர வேண்டும் என்பதும் அ. இ. கா. கமிட்டியில் நிறைவேறிய முக்கிய தீர்மானங்களில் ஒன்று.

உலகப் பிரச்னைகளையும் பல நாடுகளிடையே எழும் தகராறுகளையும் யுத்தம் எக்காலத்திலும் தீர்க்க முடியாது. நவீன யுத்தத்தினால் வெற்றியடைந்தவர்களும் கஷ்டப்படுகிறார்கள்; தோல்வியுற்றவர்களும் துன்பப்படுகிறார்கள்; மானிட வர்க்கம் அழிகின்றது என்பதை மேற்படி கூட்டத்தில் மௌலானா அபுல்கலாம் ஆஸாத் தெளிவாக எடுத்துக் கூறினார்.

உலகத்தில் யுத்தமும் யுத்த பீதியும் வல்லரசுகள் சிருஷ்டிக்கும் காரியம்தான். எனவே, வல்லரசுகள் மனம் வைத்தால் யுத்தக் கொடுமையிலிருந்து மானிடவர்க்கத்தைக் காப்பாற்ற முடியும்.

அதனால்தான் மானிட வர்க்கத்தின் வாழ்வையே பொறுத்துள்ள உலக சமாதானத்தை யொட்டி இந்திய மக்களின் பிரதிநிதி ஸ்தாபனமான காங்கிரஸ், வல்லரசுகளுக்கு உற்ற சமயத்தில் அவ்வாறு வேண்டுகோள் விடுத்திருக்கிறது.

## புகை மண்டலம்!




இந்திய வர்த்தக மந்திரி ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் ஆலைத் தொழிலுக்குப் பரிந்து அபாரமாகப் பேசி வருகிறார்.

# சமாதானம்! ஜாக்கிரதை!

ரயில்வே நிலையங்களில் முன்னெல்லாம் "திருடர்கள்! ஜாக்கிரதை!" என்று போட்டிருக்கும். அதைக் கண்டு பொது ஜனங்கள் ஜாக்கிரதை அடைந்தாலும் அடையா விட்டாலும், திருடர்கள் உஷார் ஆவார்கள்!

அதுபோல் "சமாதானம்! ஜாக்கிரதை!" என்று இந்த நாளில் சொல்ல வேண்டியதாயிருக்கிறது. சமாதான மகாநாடுகள் கூட்டிச் சண்டப்பிரசண்டமாய்ச் சண்டைப் பேச்சுப் பேசுகிறார்களே, அவர்கள் விஷயத்தில் பொது ஜனங்களும் எச்சரிக்கையாயிருக்க வேண்டும்; சமாதான தேவதையே உஷாராயிருக்க வேண்டியதுதான்!

ருஷியாவிலும் சீனாவிலும் உள்ள இராஜதந்திரிகள் சில காலமாக மேற்படி "சமாதானப் பூச்சாண்டி"யைக் கிளப்பி விட்டிருக்கிறார்கள்.

ருஷியாவிலும் சீனாவிலும் அடுத்த யுத்தத்துக்குப் பிரமாதமான முஸ்தீப்புகள் நடந்து வருகின்றன. அணுகுண்டைத் தோற்கடிக்கும் பரமாணுக் குண்டுகளும், மற்றும் பல கொடிய ஆயுதங்களும் கண்டு பிடிக்கப்பட்டு வருகின்றன.

ஆனால் இந்தியா போன்ற நாடுகளில் அவர்கள் சமாதான இயக்கத்தைத் தூண்டி விடுகிறார்கள். அவர்களுடைய நோக்கம் என்ன தெரியுமா?

1. யுத்தம் என்று வரும்போது மற்ற நாடுகள் யுத்தத்துக்கு ஆயத்தமாயிருக்கக் கூடாது. அவற்றை உடனே கபளீகரம் செய்யச் சௌகரியமாயிருக்க வேண்டும்.

2. மற்ற நாடுகளில் ஐந்தாம்படை ஸ்தாபனங்களுக்கு இப்போதிருந்தே ஏற்பாடுகள் செய்து வைத்திருக்க வேண்டும். அதற்காக அங்கங்கே சில அப்பாவி மனிதர்களைப் பிடித்துத் தயார் செய்து வைத்திருக்க வேண்டும்.

3. தங்களுடைய பிரசாரங்களை நடத்துவதற்குக் குற்றமற்றவைபோல் வெளிக்குக் காணப்படும் சில ஸ்தாபனங்களை ஏற்படுத்தி அவற்றுடன் தொடர்பு வைத்துக் கொள்ள வேண்டும்.

இத்தகைய நோக்கங்களுள்ள சமாதானச் சூழ்ச்சிப் பிரசாரத்தில் நம்மில் நல்லவர்கள் சிலர் அகப்பட்டுக் கொண்டு திண்டாடுவதைப் பார்க்கிறோம்.

* * *

சில நாளைக்கு முன்பு சென்னைமா நகரிலும் இத்தகைய சமாதான மகாநாடு ஒன்று தடபுடலாக நடந்தது. போர்க்கோலம் பூண்டு பலர் சமாதானத்துக்காகப் பேசினார்கள். பம்பாயிலிருந்து இதற்கென்று இறக்குமதியான ஸ்ரீ கரஞ்சியா என்பவர் "பண்டித நேரு செத்துப் போனால்!" என்பதையே விஷயமாக வைத்துக் கொண்டு சக்கைப்போடு போட்டார்!

ருஷியாவில் "ஸ்டாலின் செத்துப்போனால்!" என்றோ, சைனாவில் "மாசே துங் செத்துப் போனால்!" என்றோ வைத்துக் கொண்டு பேசினால், அப்படிப் பேசுகிறவர்களின் கதி உடனே அதோ கதியாகிவிடும்! ஆனால் நம்மவர்கள் சாதுக்கள்; அதோடு சாவைப் பற்றி அவ்வளவாகக் கவலைப்படாதவர்கள். ஆகையால் "சும்மாப் போட்டும்!" என்று சும்மா இருந்து விட்டார்கள். இந்த நிலையிலேயே மற்ற சமாதானப் பேச்சுக்களும் இருந்தன. இச்சமாதான வெறும் பேச்சுக்களுக்கிடையே ஆந்திர-தமிழ் சண்டைகள் கிளம்பி மண்டைகள் உடையுமோ என்ற நிலைமை ஏற்பட்டுவிட்டது!

* * *

தற்போது உலகில் சமாதானப் பிரசாரம் யாருக்குச் செய்ய வேண்டும் என்றால், அமெரிக்காவிலும் ருஷியாவிலும் சீனாவிலும் பிரான்ஸிலும் உள்ள இராஜதந்திரிகளுக்குத்தான்! அவர்கள்தான் அடுத்த உலக மகா யுத்தத்துக்கு ஆயத்தம் செய்து வருகிறவர்கள்! உலகை மீண்டும் யுத்தப் படுகுழியில் வீழ்த்த முயன்று வருகிறவர்கள்.

உலகின் சமாதானத்துக்கு உண்மையாகப் பாடுபட்டு வருகிறவர் நம் மாபெரும் தலைவரான பண்டித ஜவஹர்லால் நேருதான்! உலகத்துக்கும் யுத்தத்துக்கும் நடுவில் நின்று வருகிறவர் நம் நேருஜிதான்! இதை உலகத்து அறிஞர்கள் பலரும் ஒப்புக் கொள்கிறார்கள்.

ஆகையால் நேருவின் விரோதிகள் எல்லாரும் சமாதான விரோதிகள்; 'சமாதானம்' என்ற பெயரால் யுத்தச் சூழ்ச்சி செய்கிறவர்கள்.

இந்திய மக்களிடையே இப்போது செய்யப்பட வேண்டிய பிரசாரம் சமாதானப் பிரசாரம் அல்ல.

இந்தியா புதிதாகப் பெற்ற சுதந்திரத்தைக் கபளீகரம் செய்ய நாலாபுறமும் எதிரிகள் காத்திருக்கிறார்கள். அவர்கள் தீய முயற்சிகளைத் தகர்த்தெறிந்து இந்தியாவின் சுதந்திரத்தைப் பாதுகாக்கும் முறைகளையே பிரசாரம் செய்ய வேண்டும்.

சத்ரபதி சிவாஜி, வீரபாண்டியக் கட்டப்பொம்மன், ஜான்ஸி ராணி, வ. உ. சிதம்பரம்பிள்ளை, லோகமான்ய திலகர் முதலியவர்களுடைய சரித்திரங்களைப் பிரசாரம் செய்ய வேண்டும். அவர்களைப் போல் நாட்டின் சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்கு வீரச்செயல்கள் புரியும் சாகஸத்தை நமது இளந்தலைமுறைகளுக்கு ஊட்ட வேண்டும்.

போலி சமாதானப் பிரசாரம் ஒரு பயங்கர ஐந்தாம் படைச் சூழ்ச்சி; அந்தச் சூழ்ச்சி வலையில் நம் வாலிபர்கள் விழுந்துவிடக் கூடாது.

# போகிறார்கள்! வருகிறார்கள்! பயனற்றுப் போகிறார்கள்!

இந்தியாவிலிருந்து சில காலமாகக் கலைஞர் கோஷ்டியார் பிற நாடுகளுக்குப் போகிறார்கள்! திரும்பி வருகிறார்கள்! அநேகமாகப் பயன் அற்றுப் போகிறார்கள்! நாட்டுக்கும் தங்களுக்கும் கலைக்கும் பயன் அற்றுப் போகிறார்கள்!

சிலர் ருஷியாவுக்குப் போய்த் திரும்பி வந்தார்கள்! சிலர் அமெரிக்காவுக்குப் போயிருக்கிறார்கள்! சிலர் சீனாவுக்குப் போகிறார்களாம்!

ருஷியாவுக்குப் போய் வந்தவர்கள் தங்களை உடனே நாட்டின் மாபெருந் தலைவர்களைவிட மேலான அரசியல் தலைவர்களாக நினைத்துக் கொண்டார்கள். அந்த ஹோதாவில் பேச ஆரம்பித்தார்கள்! அதனால் நாட்டுக்கும் கலைக்கும் அவர்களுடைய உபயோகம் குறைந்து போயிற்று!

அமெரிக்காவுக்குப் போயிருக்கிறவர்களும் சீனாவுக்குப் போகப் போகிறவர்களும் இத்தகைய கதியை அடையாமல் இருக்க வேண்டுமே என்று கவலைப்படுகிறோம்.

அயல் நாடுகளுக்குப் போகும் இந்தியக் கலைஞர்கள் அவரவர்களுடைய கலைத் துறையில் புதிதாக ஏதேனும் தெரிந்துகொண்டு வந்து நாட்டுக்குப் பயன்படுத்த முயல வேண்டும். அந்த

முயற்சியைக் கைவிட்டு அரசியலில் தலையிடுவது அனர்த்தமாக முடிவதைக் காண்கிறோம்.

இந்தியாவின் சுதந்திர சர்க்காரால் கலைஞர் கோஷ்டிகள் அயல் நாடுகளுக்கு அனுப்பிவைக்கப் படவேண்டும். அப்போது அவர்களுக்கு அயல் நாடுகளில் நல்ல மதிப்பு இருக்கும். அப்படிப் போய்த் திரும்புகிறவர்களால்தான் நமது நாட்டுக் கலைகளுக்கு நன்மை விளையக்கூடும்.

அயல்நாட்டு சர்க்காராலோ, அயல்நாட்டு ஸ்தாபனங்களினாலோ அழைக்கப்பட்டுப் போகிறவர்கள், மேற்படி வெளிநாட்டாரின் கருத்துக்களையும் நோக்கங்களையும் பிரசாரம் செய்வதற்குக் கருவிகளாகத் திரும்பி வந்து சேர்கிறார்கள்! அத்தகையவர்களால் நாட்டுக்கும் நாட்டுக் கலைகளுக்கும் அவர்களுக்குமே பயன் விளைவதில்லை; அதனால் தீமைகூட உண்டாகிறது.

# சினிமாவும் நடனக் கலையும்

சமாதானச் சூழ்ச்சி மகாநாட்டுக்காகச் சென்னைக்கு வந்து "நேரு செத்துப் போனால்!" என்ற அருமையான பொருள் பற்றிப் பேசிய ஸ்ரீ கரஞ்சியாவின் மேலான தலைமையின்கீழ் சென்னையில் 'அகில இந்திய நடனக் கழகம்' அங்குரார்ப்பணம் ஆயிற்று.

இந்தக் கழகம் எவ்வளவு தூரம் உருப்படப் போகிறது, இதனால் நடனக் கலைக்கு என்ன பயன் விளையப்போகிறது என்று சொல்வதற்கில்லைதான்.

இந்த நடனக் கழக ஆரம்ப விழாவில் பேசிய நடனக் கலை ஆசிரியர் வழுவூர் ஸ்ரீ ராமையாப் பிள்ளை சினிமாவினால் நம் புராதன நாட்டியக் கலை எப்படி நாசம் அடைந்து வருகிறது என்பதை நன்கு எடுத்துக் காட்டினார் :—

"நாட்டியத்தைக் கச்சேரிகளில் சிலர்தான் பார்க்க முடிகிறது. அதிலும் சிலர்தான் ரஸிக்க முடிகிறது. காரணம் கச்சேரிகளில் அருகில் இருப்பவர்கள்தான் முக பாவங்களையும், நாட்டியக் கலையில் உள்ள அநேக நுணுக்கங்களையும் நன்றாய்ப் பார்த்து ரஸிக்க முடிகிறது. தூரத்திலிருக்கும் ஜனங்களுக்கு அவ்வளவு நன்றாய் ரசிக்க முடிகிறதில்லை. ஆனால் சினிமாப் படத்தில் எவ்வளவு ஜனங்கள் பார்த்தாலும் வெகு அருகில் இருந்து பார்ப்பது போலவே பார்த்து ரஸிக்க வசதி இருக்கிறது. ஒவ்வொரு படத்தையும் தொலை தூரங்களில் உள்ள சகல கிராமத்து ஜனங்களும் பார்க்க நேருகிறது. ஆகையால் சினிமாவின் மூலமாக நாட்டியத்தின் பெருமையை எல்லோரும் உணரும்படி செய்யலாம். இதற்கு, சினிமாப் படங்களில் சேர்க்கப்படும் நடனம் உத்தமமான முறையில் உன்னத அமைப்புகளைக் கொண்டு இருக்க வேண்டும். ஆனால் தற்காலத்தில் நடனம் என்ற பெயருடன் சினிமாப் படங்களில் புகுத்தப்படும் காட்சிகள் அற்ப உணர்ச்சியைத் தூண்டிவிடும் அர்த்தமற்ற ஆட்டங்களாக இருக்கின்றன.

நம் நாட்டின் இப்புராதனக் கலையைக் கண்டு இதர நாட்டார் அனைவரும் புகழ்ந்து போற்றுகின்றார்கள். நம் நாட்டில் சிறுபான்மையோர் மேல் நாட்டிலிருந்து வேண்டாத முறையில் ஆபாச நாட்டியத்தைக் கடன் வாங்கி நம் நடனக் கலையுடன் கலந்து உருக்குலைத்து, நல்லுணர்ச்சி உள்ளோர் பார்த்து வெட்கித் தலை குனியும்படி ஏன் செய்ய வேண்டும்! அப்படி செய்யும் நடன ஆசிரியர்களும் பட முதலாளிகளும் நமது நாட்டின் நடனக்கலைப் பண்பை மறக்க வேண்டாம்."

நடன ஆசிரியர் ஸ்ரீ ராமையாப் பிள்ளை நிலைமையை வெகு நன்றாக எடுத்துக் கூறியிருக்கிறார். அதனால் ஏதேனும் பயன் விளையப் போகிறதா என்று பொறுத்திருந்துதான் பார்க்க வேண்டும்.

அட்டைப்பட விளக்கம்

# பொழுது புலர்ந்தது!

ஒரு தேசத்தில் தங்கம், வைரம், நிலக்கரி, இரும்பு இன்னுமுள்ள உலோகங்கள் எல்லாம் வழங்கக்கூடிய சுரங்கங்கள், கனிகள் இருக்கலாம்.

வகை வகையான ஆடைகள் செய்யக்கூடிய ஆலைகளும், பிரம்மாண்டமான இயந்திரங்களைச் செய்யக் கூடிய இயந்திர சாலைகளும் இருக்கலாம்.

இவையெல்லாம் இருந்தும், ஒரு நாட்டில் தானியம் விளையக்கூடிய பூமியோ, அதை விளைவிக்கச் செய்யக்கூடிய உழவுத் தொழிலாளியோ இல்லை எனில், அந்நாடு பூரண வாழ்வுபெற்ற நாடாக முடியாது.

எந்தத் தொழிலில் ஈடுபட்டாலும், கடைசியில் எண்சாண் மனித உடம்பு கேட்பது, ஒரு சாண் வயிற்றுக்கு வேண்டிய உணவே யல்லவா! "உண்டி கொடுத்தார் உயிர் கொடுத்தாரே!" என்ற பழமொழியும் உண்டல்லவா!

அதனால்தான் விவசாயத் தொழிலை முதல் தொழிலாக நம்மவர்கள் கருதினார்கள்! உழவுத் தொழிலுக்கு ஏற்றம் கொடுக்க வேண்டியே, 'உழுகின்ற கொழு முகத்தின் உதிக்கின்ற கதிரின் ஒளி' போன்று பூமியிலிருந்து சீதை கண்டு எடுக்கப் பட்டாள் என்று கூறினார் கம்பர். தெய்வப் புலமைத் திருவள்ளுவர், 'உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்' என்று கூறினார்! நமது காலத்தில் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, "சரஸ்வதி தேவி குடியிருக்கும் இடங்கள் மூன்று. அவற்றில் முதலிடம், 'நாடிப் புலங்கள் உழுவார் கரம்'" என்று கூறுகிறார்.

இப்படி உலகத் தொழில்களில் எல்லாம் மிகச் சிறந்த தொழிலாளியை இந்த இதழ் அட்டைப் படச் சித்திரமாகத் தீட்டியிருக்கிறார் நமது சித்திரக்காரர். அந்தத் தொழிலாளி வைகறையில் எழுந்து கோபுர தரிசனம் செய்துவிட்டுக் கலப்பையை எடுத்துத் தோளில் வைத்துக் கொண்டு வயலை நோக்கி நடக்கிறான். அவன் உள்ளம் சமீபத்தில் ராஜாஜி கொண்டுவந்த விவசாய அவசரச் சட்டத்தை நினைக்கும்போது உவகை பொங்கி வருவதால், அவனுடைய வாய் அவனை யறியாமலேயே,

"பொழுது புலர்ந்தது யாம்செய்த தவத்தால்
புன்மை யிருட்கணம் போயின யாவும்"

என்னும் கவியரசர் சுப்பிரமணிய பாரதியாரின் பாடல் வரிகளைப் பாடி மகிழ்கின்றது!

# பாரதி விழா



இந்த மாதம் 11, 12உகளில் பாரதி விழா சென்னை, கச்சாலீஸ்வரர் கோயில் சன்னிதியில் கோலாகலமாக நடந்தேறியது.

- அலங்கரித்த யானை மூன் செல்ல பாரதியார்படத்தை ஊர்வலமாக எடுத்து வந்த போது திரளான ஜனங்கள் கவி அரசருக்கு அஞ்சலி செய்து மகிழ்ந்தனர்.
- தொழில் மந்திரி கனம் ஆ. கிருஷ்ண ராவ் பாரதித் திருவிழாவைத் தொடங்கி வைத்தார்.
- பாரதியார் திரு உருவப்பட ஊர்வலத்தில் திருவெண்காடு ஸ்ரீ சுப்பிரமணியம் பிள்ளையின் நாதஸ்வர இசை முழங்கியது.



- அரியக்குடி ஸ்ரீ ராமானுஜ ஐயங்காரின் மகோன்னதமான சங்கீதக் கச்சேரி பாரதி விழாவுக்குப் பெருமை யளித்தது.
- பாரதி விழாவில் நெருக்கி யடித்துக் கொண்டு அமர்ந்திருந்த உற்சாகமான கூட்டத்தில் ஒரு பகுதி.
- ஸ்ரீமதி கே. எஸ். தனம்மாள் பாரதி விழாவில் செய்த கச்சேரியில் "பாரதி வாழியவே" என்ற கல்யாணி ராக கீர்த்தனையை அருமையாகப் பாடினார்.
- பாரதியாரின் சத்ரபதி சிவாஜி பாடலைச் சிவாஜியாகத் தோன்றிப் பாடி நடித்த ஸ்ரீ டி. கே. பகவதி "ஜய பேரிகை" கொட்டி முழக்கினார்.



- பாரதி விழாவில் ஸ்ரீ கொத்தமங்கலம் சுப்பு பாரதியாரின் சரித்திரத்தைக் கதா காலட்சேபம் செய்தார்.
- பாரதி விழாவுக்கு விஜயம் செய்த ராஜாஜி அரியக்குடி ராமானுஜ ஐயங்காரின் கச்சேரியைப் பெரிதும் அநுபவித்து மகிழ்ந்து 'பேஷ்!' என்று கூறிப் பாராட்டினார்.
- விழாவின் தலைவர் நிதி மந்திரி ஸ்ரீ சுப்ரமண்யம் இரண்டு தினங்களிலும் பல முறை பாரதியாரைப் பற்றிப் பேசினார்.
- 'ஆங்கிலேயனும் தேச பக்தனும்' என்ற பாரதி பாடலை இசை நாடகமாக அமைத்து ஸ்ரீ டி. கே. சண்முகம் வ. உ. சி.யாக நடித்தபோது விழா உச்ச நிலையை அடைந்தது.

போட்டோ: எம்.டி.கணேஷ்




நாலாம் அத்தியாயம்

## ஐயனார் கோவில்

கொடில நதிக் கரையில் பாட்டனும் பேரனும் பேசிக் கொண்டிருந்த அதே சமயத்தில் கொள்ளிடத்தின் வட கரையில் உள்ள திருக்கானாட்டு முள்ளூர் என்னும் ஊரில் நம் பழைய நண்பர்களான ஆழ்வார்க்கடியானும் வந்தியத்தேவனும் ஒரு விநோதமான காரியத்தில் ஈடுபட்டிருந்தார்கள். அக் காலத்தில் வட காவேரியாகிய கொள்ளிடமும் தென் காவேரியைப் போலவே புண்ணிய நதியாகக் கருதப்பட்டு வந்தது. துலா மாதத்தில் தினந்தோறும் கானாட்டுமுள்ளூர் ஆலயத்தில் கோயில் கொண்டுள்ள சிவபெருமான் ரிடபாரூடராகக் கொள்ளிடக் கரைக்கு எழுந்தருளி ஸ்நானத்துக்கு வந்துள்ள பக்தர்களுக்குச் சேவை தருவது வழக்கம். மத்தியான வேளையில் ஒவ்வொரு நாளும் உற்சவமாகவே இருக்கும். அக்கம் பக்கத்துக் கிராமங்களிலிருந்து பக்தர்கள் திரண்டு வருவார்கள். சைவர்களும் வருவார்கள்; வைஷ்ணவர்களும் வருவார்கள். விஷ்ணு கோயில் அந்த ஊரில் சிறிதாக இருப்பினும் அந்தக் கோயிலிலிருந்தும் பகவான் கருட வாகனத்தில் ஆரோகணித்துக் கொள்ளிடக் கரைக்கு எழுந்தருளுவார்.

இவ்விதம் துலா மாதத்தில் வட காவேரியில் ஸ்நானம் செய்வதற்காக வந்து கூடியிருந்த ஜனக் கூட்டத்தினிடையே ஆழ்வார்க்கடியான் ஒரு நாவல் கிளையை மண்ணில் நட்டு வைத்துக் கொண்டு, "நாவலோ நாவல்! நாவலோ நாவல்! இந்த நாவலந் தீவில் வைஷ்ணவ சமயமே மேலான சமயம் என்று நிலை நாட்டுவதற்கு வாதப் போர் புரிய வந்துள்ளேன். சைவர்கள், சாக்தர்கள், அத்வைதிகள், காபாலிகர்கள், காளாமுகர்கள், புத்தர்கள், சமணர்கள் யார் வேணுமானாலும் வாதப் போர் புரிய வரலாம். அவர்கள் வெற்றி பெற்றால் அவர்களை என் தோள்மீது தூக்கி வைத்துக் கொண்டு ஊரைச் சுற்றி ஊர்வலம் வருவேன். அவர்கள் தோற்றால் இடுப்புத் துணியைத் தவிர மற்றதையெல்லாம் இங்கே கொடுத்து விட்டுப் போக வேணும்! நாவலோ நாவல்!" என்று கத்திக் கொண்டிருந்தான். அவனுக்கு முன்னால் ருத்திராட்ச மாலைகள், மகர கண்டிகள், கமண்டலங்கள், குண்டலங்கள், பட்டுப் பீதாம்பரங்கள், பொற்காசுகள் ஆகியவை குவிந்து கிடந்தன. இவற்றிலிருந்து அவன் வெகு நேரம் வாதமிட்டுப் பலரை வாதப் போரில் வென்றிருக்க வேண்டும் என்பது தெளிவாயிருந்தது. அவனுக்குப் பக்கத்தில் கடம்ப மரம் ஒன்றில் சாய்ந்து கொண்டு வந்தியத் தேவன் கையில் உருவிய கத்தியுடன் நின்று கொண்டிருந்தான். இப்போது அவனுடைய அரையில் உடுத்திய ஒரு துணியும் கையில் ஒரு கத்தியும் மட்டும் தான் இருந்தன. அவனுடைய தோற்றத்திலிருந்து ஆழ்வார்க்கடியான் மீது பலாத்காரத்தைப் பிரயோகிக்கப் பார்த்தவர்களை அவன் கத்தியை வீசிப் பயமுறுத்தி அனுப்பியிருக்க வேண்டும் என்று தோன்றியது. அந்தச் சமயத்தில் கூட்டமாகவும் கோஷித்துக் கொண்டும் வந்த சைவர் கூட்டம் ஒன்றைப் பார்த்து

அவன் கூறிய மொழிகளிலிருந்தும் அது வெளியாயிற்று.

"எச்சரிக்கை! நியாயமாக வாதப் போர் செய்வோர் செய்யலாம். அத்து மீறி இந்த வைஷ்ணவன் மீது யாராவது கையை வைத்தால் இந்த வாளுக்கு இரையாவார்கள்!" என்று கூறியதுடன், கத்தியையும் இருமுறை சுழற்றினான். கோபத்துடன் வந்த சைவர்கள் சாந்தமடைந்தார்கள், அவர்களில் ஒருவர், "ஓ! வைஷ்ணவனே! ஏதோ நீ இன்றைக்கு வாதத்தில் ஜயித்து விட்டதாக எண்ணிக் கர்வம் கொள்ளாதே! திருநாரையூருக்குப் போ! அங்கே உன்னை வாதில் வென்று புறமுதுகிட்டு ஓடச் செய்யக் கூடிய நம்பியாண்டார் நம்பி இருக்கிறார்!" என்றார்.

"உங்கள் திருநாரையூர் நம்பியைத் திருநாராயணபுரத்து அனந்த பட்டரிடம் வந்து வாதமிடச் சொல்லுங்கள்! அங்கே நானும் ஒரு வேளை இருந்தாலும் இருப்பேன்!" என்று கூறினான் ஆழ்வார்க்கடியான்.

பலமுறை அவன் "நாவலோ நாவல்!" என்று கூவியும் யாரும் புதிதாக வாதமிட வரவில்லை. எனவே, நாவல் கிளையை எடுத்துவிட்டுச் சங்கு சக்கரம் பொறித்த வெற்றிக் கொடியை ஆழ்வார்க்கடியான் நட்டான். பக்கத்தில் நின்று எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்த வைஷ்ணவர்கள் சிலர் உடனே அவன் அருகில் வந்து அவனைத் தூக்கித் தோளில் வைத்துக் கொண்டு,

"நாராயணனே நம் தெய்வம்!
நாமெல்லாரும் துதிசெய்வம்!"

என்று பாடிக் கொண்டு கூத்தாடினார்கள். பிறகு அவர்கள், "வீர வைஷ்ணவனே! எங்கள் இல்லத்துக்கு வந்து திரு அமுது செய்து அருள வேண்டும்!" என்று பிரார்த்தித்தார்கள். "அங்ஙனமே ஆகுக!" என்று ஆழ்வார்க்கடியான் கம்பீரமாகக் கூறிவிட்டு, வந்தியத்தேவனையும் அழைத்துக் கொண்டு சென்றான். இருவரும் புளியோரை, திருக்கண்ணமுது, ததியோன்னம் ஆகியவற்றை வயிறுமுட்டும்படி ஒரு கை பார்த்தார்கள். ஆழ்வார்க்கடியான் தான் வாதப் போரில் சம்பாதித்த பொருள்களில், அங்கவஸ்திரமாக அணியக் கூடிய பீதாம்பரம் ஒன்றை மட்டும் வந்தியத்தேவனிடம் கொடுத்து விட்டு மற்றவற்றை ஸ்ரீ வைஷ்ணவர்களிடம் கொடுத்து அவற்றின் பெறுமானத்துக்குப் பொற் கழஞ்சுகள் பெற்றுக் கொண்டான். வைஷ்ணவ சமயத்தின் மேன்மையை நிலைநாட்டிக் கொண்டு வடக்கே ஹரித்வாரம் வரையில் போக வேண்டியிருப்பதால் தனக்குப் பொற்காசு தேவை என்பதாக அவன் தெரிவித்துக் கொண்டான். ஸ்ரீ வைஷ்ணவர்களும் மனமுவந்து பொருள்களின் பெறுமானத்துக்கு அதிகமாகவே பொற்காசுகள் கொடுத்தார்கள். பெற்றுக் கொண்டு ஆழ்வார்க்கடியானும் வந்தியத்தேவனும் பிற்பகலில் கடம்பூரை நோக்கிப் பிரயாணமானார்கள்.

கொள்ளிடத்தில் அப்போது பெரு வெள்ளம் போய்க் கொண்டிருந்தபடியால் அவர்கள் ஏறி வந்த குதிரைகளைக் கொண்டு வரமுடியவில்லை. அவர்கள் நதியைக் கடந்த ஓடத்தில் ஜனங்கள் அதிகமாக ஏறியிருந்தபடியால் படகு வடகரையை அடையும் சமயத்தில் கவிழ்ந்து விட்டது. மற்றவர்களைப்போல் வந்தியத்தேவனும் ஆற்று வெள்ளத்தில் விழுந்து நீந்திக் கரை சேர வேண்டியதாயிற்று. அச்சமயம், அத்தனை காலமாக எத்தனையோ நெருக்கடியான நிகழ்ச்சிகளிலும் வந்தியத்தேவன் காப்பாற்றிக் கொண்டு வந்த அவனுடைய அரைக் கச்சச் சுருளும் அதில் அவன் பத்திரப்படுத்தி வைத்திருந்த இலச்சினைகளும் இளைய பிராட்டி தந்த ஓலையுங்கூட நதி வெள்ளத்தில் போய் விட்டன. அவற்றுடன் இருந்த பொன் நாணயங்களும் போய் விட்டன. புதிய குதிரைகள் வாங்குவதற்குப் பணம் சேகரிப்பதற்காகவே மேற்கூறிய யுக்தியை அவர்கள் கையாண்டார்கள். யுக்தி பலித்துக் கொஞ்சம் பணமும் கிடைத்தது. ஆனால் அந்தக் கிராமாந்தரப் பகுதிகளில் குதிரை எங்கும் விலைக்குக் கிடைக்காது என்றும் தெரிந்தது. கடம்பூர் கிராமத்தில் வாரம் ஒருநாள் நடைபெறும் சந்தையில் ஒருவேளை குதிரைகள் விற்பனைக்கு வரலாம். இல்லாவிடில் திருப்பாப்புலியூர் சென்றுதான் வாங்க வேண்டும்.

கடம்பூருக்குப் போவதா, வேண்டாமா என்பது பற்றி அந்த நண்பர்களுக்குள் விவாதம் நடந்தது. அதில் உள்ள சாதக பாதகங்களைப் பற்றி விவாதித்தார்கள். கடம்பூரில், ஆதித்த கரிகாலரின் வருகையைப் பற்றி ஏதேனும் செய்தி கிடைத்தாலும் கிடைக்கலாம். காஞ்சியிலிருந்து புறப்பட்டு விட்டாரா, எந்த வழியாக வருகிறார் என்று ஏதேனும் தகவல்



தெரிந்தால் நல்லது அல்லவா? ஆனால் கடம்பூரில் தெரிந்தவர்களின் கண்ணில் படக்கூடாது. கந்தமாறனைச் சந்திக்க நேர்ந்துவிட்டால் ஆபத்தாய்ப் போய்விடும். ஒருவேளை பழுவேட்டரையரின் பரிவாரங்கள் இதற்குள் வந்திருந்தால், அதுவும் தொல்லைதான்!—

"வைஷ்ணவனே! உனக்குத் தான் இரவில் சுவர் ஏறிக் குதிக்கத்தெரியுமே? சம்புவரையர் குதிரை லாயத்திலிருந்தே இரண்டு குதிரைகளைக் கொண்டுவந்து விடலாமே?" என்றான் வந்தியத்தேவன்.

"நான் சுவர் ஏறிக் குதிப்பேன். ஆனால் குதிரைகளுக்குச் சுவர் ஏறிக் குதிக்கத் தெரிய வேண்டுமே?" என்றான் வைஷ்ணவன்.

"பழுவூர்ப் பரிவாரங்கள் அங்கே வந்திருந்தால், இரண்டு குதிரைகளை அடித்துக் கொண்டு போகலாம். அவர்கள் முன்னொரு சமயம் கடம்பூரில் என்னுடைய குதிரையை விரட்டியடித்தார்கள் அல்லவா? அதற்குப் பழிக்குப் பழி வாங்க வேண்டும்!" என்றான் வாணர்குல வீரன்.

சில மாதங்களுக்கு முன்பு கடம்பூரில் அவர்கள் சந்தித்தது பற்றியும் அன்று இரவு நடந்த அபூர்வ சம்பவங்களைப் பற்றியும் வழிநெடுக பேசிக்கொண்டு வந்தார்கள். இருவரும் சூரியன் அஸ்தமிக்கும் சமயத்துக்குக் கடம்பூரை அடைந்தார்கள்.

கடம்பூர் அவர்கள் எதிர்பார்த்தது போல் அமர்க்களப் பட்டுக் கொண்டு தானிருந்தது. அரண்மனையும் கோட்டை வாசலும் கொடிகளாலும் தோரணங்களாலும் தொங்கல் மாலைகளாலும் அலங்கரிக்கப் பட்டு விளங்கின. கோட்டை வாசலிலும் சரி, மதிள் சுவரைச் சுற்றியும் சரி, முன்னைவிடக் காவல் பலமாக இருந்தது. பட்டத்து இளவரசர் ஆதித்த கரிகாலர் வருகிறார் என்றால், கேட்க வேண்டுமா! அதே சமயத்தில், தனாதிகாரி பெரிய பழுவேட்டரையரும் ராணியுடன் வரப்போகிறார். இரண்டு பேருடைய பரிவாரங்களும் வருவார்கள். சில நாளைக்கு ஊர் தடபுடல் பட்டுக் கொண்டுதானிருக்கும்.

இதையெல்லாம் பற்றிக் கடம்பூர் கடைத் தெருவில் ஜனங்கள் பேசிக் கொண்டிருந்ததை இரு நண்பர்களும் கேட்டார்கள். ஜனங்கள் பேச்சிலிருந்து இரு சாராரும் இன்னும் வந்து சேரவில்லை என்று தெரிந்தது. சம்புவரையர் மகன் கந்தமாறன் ஆதித்த கரிகாலரை அழைத்து வரக் காஞ்சிக்கே புறப்பட்டுப் போயிருக்கிறான் என்றும் தெரிந்தது. இந்தப் பரபரப்பான பேச்சுக்களுக்கிடையில் சிலர் 'கடல் கொண்டு விட்ட' இளவரசன் அருள்மொழிவர்மனைப் பற்றியும் மெல்லிய குரலில் பேசினார்கள். அவ்வளவு பெரிய துக்க சம்பவம் நடந்திருக்கும்போது இங்கே விருந்துகளுக்கும் களியாட்டங்களுக்கும் ஏற்பாடு நடந்து வருவது பலருக்குப் பிடிக்கவில்லை என்பது. ஜாடைமாடையாக அவர்கள் பேசிக் கொண்டதிலிருந்து தெரிந்தது.

ஆழ்வார்க்கடியானும் வந்தியத் தேவனும் இந்தப் பேச்சுக்களையெல்லாம் காது கொடுத்துக் கேளாதவர்கள்போல் கேட்டுக் கொண்டு ஊரைத் தாண்டிப் போனார்கள். ஊருக்குள் எங்கேயும் இரவு தங்க அவர்கள் விரும்பவில்லை. ஊருக்கு அப்பால் சமீபத்தில் எங்கேயாவது பாழடைந்த மண்டபம், அல்லது சத்திரம் சாவடி இல்லாமலா போகும்? அப்படியில்லாவிட்டால், இரவு திருநாராயணபுரத்துக்குப் போய்த் தங்கி விடுவது நல்லது. அங்கேயுள்ள பெரிய பெருமாள் கோயிலின் நூற்றுக் கால் மண்டபத்தில் நிம்மதியாகப் படுத்து



உறங்கலாம். முதல் நாள் இரவு நிகழ்ச்சிகளுக்குப் பிறகு ஓர் இரவு நல்ல தூக்கம் அவர்களுக்கு அவசியமா யிருந்தது.

கடம்பூரைத் தாண்டிச் சாலையோடு சிறிது தூரம் சென்றதும் அடர்த்தியான மூங்கில் காடு ஒன்றும் அதற்குள் ஐயனார் கோவில் ஒன்றும் தெரிந்தன. "வைஷ்ணவரே! இனிமேல் என்னால் நடக்க முடியாது. இரவு இந்தக் கோயிலில் படுத்திருக்கலாம். யார் கண்ணிலும் படாமலிருப்பதற்கு இது நல்ல இடம்!" என்றான் வந்தியத்தேவன்.

"அப்பனே! நீ சொல்வது தவறு! இம்மாதிரி இடங்களுக்கு நம்மைப்போல் இன்னும் யாராவது வந்து சேரமாட்டார்கள் என்பது என்ன நிச்சயம்?" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"அப்படி வருகிறவர்கள் குதிரைகளுடன் வந்தார்களானால் ரொம்ப நல்லது" என்றான் வந்தியத்தேவன்.

"இந்த மூங்கில் காட்டுக்குள் எந்தக் குதிரையும் நுழைய முடியாது. மனிதர்கள் நுழைந்து செல்வதே கடினமான காரியம் ஆயிற்றே!"

"எங்கேயாவது ஒற்றையடிப் பாதை ஒன்று இல்லாமற் போகாது. கோயில் பூசாரி வரக்கூடிய வழியேனும் இருந்து தானே ஆக வேண்டும்?"

இருவரும் அடர்த்தியாக மண்டிக் கிடந்த மூங்கில் புதர்களைச் சுற்றிச் சுற்றி வந்து, கடைசியாகக் குறுகலான ஒற்றையடிப் பாதை ஒன்றைக் கண்டு பிடித்தார்கள். அதன் வழியாக உடம்பில் முட்கள் கீறாமல் நடந்து போவது மிகவும் பிரயாசையாக இருந்தது. இவ்விதம் சிறிது தூரம் சென்ற பிறகு கொஞ்சம் இடைவெளி காணப்பட்டது. அதில் சிறிய ஐயனார் கோவில் இருந்தது. கோவிலுக்கு எதிரே பலிபீடமும் அதையொட்டி மண்ணினால் செய்து காளவாயில் சுடப்பட்ட யானைகளும் குதிரைகளும் வரிசையாக வைக்கப்பட்டிருந்தன. ஐயனாருக்கு வேண்டுதல் செய்து கொள்ளும் பக்தர்கள் இவ்விதம் மண்ணினால் செய்த குதிரைகளும் யானைகளும் கொண்டு வந்து வைப்பது வழக்கம்.

அவற்றைப் பார்த்ததும், வந்தியத்தேவன், "குதிரைகளைப் பற்றி இவ்வளவு கவலைப் படுகிறோமே? ஐயனாரைக் கேட்டு இரண்டு குதிரைகள் வாங்கிக் கொள்ளலாமே?" என்றான்.

"மண் குதிரையை நம்பி ஆற்றில் இறங்கக் கூடாது என்ற பழமொழி தெரியாதா!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"வைஷ்ணவனே! எங்கள் ஐயனார் மிகவும் சக்தி வாய்ந்த தெய்வம். கேட்ட வரத்தை உடனே கொடுக்கக் கூடியவர். உங்கள் விஷ்ணுவைப் போல் பக்தர்களைத் தவிக்க விட்டு விட்டுப் பட்டப் பகலில் தூங்கிக் கொண்டிருப்பவர் அல்ல!" என்றான் வந்தியத் தேவன்.

"அப்படியானால் இந்த மண் குதிரைகளுக்கு உயிர் கொடுத்தாலும் கொடுப்பார் என்று சொல்லு! ரொம்ப நல்லதாய்ப் போயிற்று. பணம் மிச்சம்!"

"உண்மையான பக்தி இருந்தால் மண் குதிரைகளும் உயிர் பெறும்! பார்க்கப் போனால், நம்முடைய உடம்புகள் மட்டும் என்ன? பிரம்மதேவன் மண்ணினால் செய்து உயிர் கொடுத்ததுதானே?"

"நன்கு சொன்னாய், தம்பி! இந்த உடம்பு மண்ணினால் செய்த உடம்பு என்பதை மறந்து விடுகிறோம். அதை அடிக்கடி ஞாபகப் படுத்திக் கொள்வதற்காகவே திருமண்ணைக் குழைத்து நெற்றியிலும் உடம்பிலும் இட்டுக் கொள்ளும்படி வைஷ்ணவ ஆச்சாரிய புருஷர்கள் கட்டளை யிட்டிருக்கிறார்கள்!"

வந்தியத்தேவன் "உஷ்!" என்று சொல்லி, ஆழ்வார்க்கடியானுடைய கையைப் பிடித்துக் கொண்டு, இன்னொரு கையினால் எதிரே சுட்டிக்காட்டினான். சூரியன் அஸ்தமித்துச் சிறிது நேரம் ஆகி விட்டது. நாலாபுறமும் இருண்ட மூங்கில் தோப்புகள் சூழ்ந்திருந்த அச்சிறிய இடைவெளியில் மிக மங்கலாகத் தெரிந்த வெளிச்சத்தில் ஐயனாருடைய வாகனங்கள் உயிர் பெற்று அசைவதாகத் தோன்றின. ஒரு யானையும் ஒரு குதிரையும் இடம் பெயர்ந்து நகர்ந்தன. கண்ணால் கண்ட இந்த அற்புதத்தை நம்புவதா, இல்லையா என்று தெரியாமல் வந்தியத் தேவன் சிறிது நேரம் திகைத்து நின்றான். ஆனாலும் ஐயனாருடைய அற்புத சக்தியை ஆழ்வார்க் கடியானுக்கு உடனே உணர்த்தி விடக்கூடிய சந்தர்ப்பத்தை இழக்கவும் அவனுக்கு மனம் வரவில்லை. "வைஷ்ணவரே! பார்த்தீரா?..." என்று அவன் சொல்வதற்குள், ஆழ்வார்க்கடியான் அவனுடைய கையை இறுக்கிப் பிடித்து, உதட்டில் விரல் வைத்துச் சமிக்ஞை காட்டி, பேச்சை நிறுத்தினான். பின்னர், இறுக்கிப் பிடித்த கையினால் வந்தியத் தேவனைப் பற்றியவாறு அவனை இழுத்துக் கொண்டு அந்த மூங்கில் புதருக்குப் பின்னால் சென்று நன்றாக மறைந்து நின்றான்.

குதிரையும் யானையும் அசைந்து சிறிது விலகிக் கொடுத்தன அல்லவா? அப்படி விலகிக் கொடுத்து இடைவெளி ஏற்பட்ட இடத்தில் ஒரு மனிதனுடைய தலை மட்டும் தெரிந்தது. அந்தத் தலை அப்பாலும் இப்பாலும் திரும்பி நாலுபுறமும் பார்த்தது. ஐயனாருடைய பலி பீடத்துக்குப் பக்கத்தில் இம்மாதிரி ஒரு தலை மட்டும் தோன்றி நாலாபுறமும் சுழன்று விழித்த காட்சி மிகப் பயங்கரமாயிருந்தது. எவ்வளவோ பயங்கரங்களைப் பார்த்திருந்த வந்தியத் தேவனுடைய மெய் சிலிர்த்தது. ஆனால் ஆழ்வார்க்கடியான் தன்னைப் பிடித்திருந்த கை சிறிதும் நடுக்கமுறாமலும் தளராமலும் இருந்ததை அறிந்து வந்தியத்தேவன் நெஞ்சுறுதி கொண்டான்.

இவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும் போதே அந்தத் தலை எழும்பி மேலே வந்தது. ஒரு மனிதனுடைய மார்பு வரையில் தெரிந்தது. பிறகு அம்மனிதன் முழுமையான உருவத்துடன் கிளம்பி மேலே வந்தான். அம்மனிதன் வெளி வந்த இடத்தில் ஒரு சிறிய பிளவு, கரிய இருள் சூழ்ந்த பாதாள பிலத்துவாரத்தைப் போல, பயங்கரமாக வாயைத் திறந்து கொண்டிருந்தது.

சற்று உற்றுப் பார்த்த பின்னர் அந்த மனிதன் யார் என்பதும் அவர்களுக்குத் தெரிந்து விட்டது. கடம்பூர் மாளிகையில் பணியாளனாக இருந்து கொண்டே ரவிதாஸனுடைய சதிக் கும்பலிலும் சேர்ந்திருந்த இடும்பன் காரிதான் அவன்.

இதை இருவரும் ஏககாலத்தில் அறிந்து கொண்டதும் ஒருவரையொருவர் பார்த்துத் தங்கள் வியப்பைச் சமிக்ஞையினாலேயே தெரிவித்துக் கொண்டார்கள்.

இடும்பன்காரி திறந்திருந்த துவாரத்தை அப்படியே விட்டு விட்டு, மறுபடியும் ஒரு தடவை சுற்று முற்றும் பார்த்துவிட்டு, ஐயனார் கோவிலை நோக்கி நடந்தான். கோவில் கதவைத் திறந்துகொண்டு உள்ளே போனான். சிறிது நேரத்துக்கெல்லாம் கோயிலுக்குள்ளேயிருந்து மூனுக்கு மூனுக்கு என்று வெளிச்சம் தெரிந்தது. கோவிலுக்குள் விளக்கேற்றப் பட்டிருக்கிறது என்பதை அறிந்து கொண்டார்கள்.

"தம்பி! இதைப் பற்றி என்ன நினைக்கிறாய்!" என்று மூனு மூனுக்கும் குரலில் அடியான் கேட்டான்.

"ஐயனார் சக்தியுள்ள தெய்வம் என்று நினைக்கிறேன்; குதிரைக்கு உயிர் வந்ததைப் பார்க்கவில்லையா?" என்றான் வந்தியத் தேவன்.

"அது சரி! இப்போது வந்தானே, அவனைப் பற்றி என்ன நினைக்கிறாய்?"

"அவன் ஐயனார் கோவில் பூசாரி போலிருக்கிறது. நாமும் போய்ச் சுவாமி தரிசனம் செய்யலாமா?"

"கொஞ்சம் பொறு! இன்னும் யாராவது சுவாமி தரிசனத்துக்கு வருகிறார்களா என்று பார்த்துக் கொள்ளலாம்."

"இன்னும் யாரேனும் வருவார்கள் என்று நினைக்கிறீர்களா?"

"பின் எதற்காக இவன் விளக்குப் போடுகிறான்?"

"பூசாரி கோவிலுக்கு விளக்குப் போடுவதில் ஆச்சரியம் என்ன?"

"தம்பி! அவன் யார் என்று தெரியவில்லையா?"

"நன்றாய்த் தெரிகிறது. கொள்ளிடத்தின் தென் கரையில் எனக்குக் குதிரை வாங்கிக் கொண்டுவந்து கொடுத்தானே? அந்த இடும்பன்காரி அவன்தான்! இப்போதும் அவனிடம் குதிரை கேட்கலாம் என்று பார்க்கிறேன்..."

"நல்ல யோசனை செய்தாய்!"

"உமக்குப் பிடிக்கவில்லையா?"

"இடும்பன்காரி உனக்குக் குதிரை வாங்கிக் கொடுத்தவன் மட்டும் அல்ல; ரவிதாஸன் கூட்டத்தைச் சேர்ந்தவன்."

"அப்படியானால், இன்னொரு நல்ல யோசனை தோன்றுகிறது."

"என்ன? என்ன?"

"இடும்பன் காரி ஐயனார் கைங்கரியத்தில் ஈடுபட்டிருக்கும்போது, அவன் எங்கிருந்து வந்து முளைத்தான் என்பதைப் பார்த்துத் தெரிந்து கொண்டு வரலாம் என்று எண்ணுகிறேன்."

"அது எப்படி முடியும்?"

"அவன் வெளியே வந்த துவாரத்தினால் நான் உள்ளே போக முடியாதா?"

"முடியலாம். ஆனால் அதில் உள்ள அபாயங்கள்......"

"அபாயம் இல்லாத காரியம் எது?"

"அப்புறம் உன் இஷ்டம்."

"வைஷ்ணவரே! நீங்கள் இங்கேயிருந்து என்ன நடக்கிறதென்று பார்த்துக் கொண்டிருங்கள்......"

"அதற்கென்ன கஷ்டம்? நான் இருந்து பார்த்துக் கொண்டிருக்கிறேன். சுரங்க வழி எங்கே போகும் என்று உனக்கு ஏதாவது தோன்றுகிறதா?"

"தோன்றுகிறது சுவாமி, தோன்றுகிறது! அது சரிதானா என்று தெரிந்து கொள்ள விரும்புகிறேன்."

"அதை நீ எதற்காகத் தெரிந்து கொள்ள வேணும்?"

"ஏதேனும் ஒரு சமயத்தில் உபயோகப் படலாம். யார் கண்டது?"

அச்சமயம் சற்றுத் தூரத்தில் வேறு பேச்சுக் குரல்கள் கேட்டன.

"தாமதிப்பதற்கு நேரமில்லை, வைஷ்ணவரே! நான் திரும்பி வருகிற வரையில் இங்கேயே இருப்பீர் அல்லவா? அல்லது சுக்ரீவன் வாலிக்குச் செய்தது போல் செய்து விடுவீரா?"

"உயிர் உள்ள வரையில் இங்கேயே இருக்கிறேன். ஆனால் நீ திரும்பி வருவது என்ன நிச்சயம்?"

"உயிர் இருந்தால் நானும் திரும்பி வருவேன்......"

இவ்விதம் சொல்லிக் கொண்டே வந்தியத்தேவன் நாலே பாய்ச்சலில் துவாரம் தெரிந்த இடத்தை நோக்கி ஓடினான். அதற்குள் இறங்கினான். மறு கணமே அந்த இருண்ட பள்ளத்தில் மறைந்தான். பிலத்துவாரம் அவனை அப்படியே விழுங்கி விட்டதாகத் தோன்றியது.

கோயிலுக்குள் சென்றிருந்த இடும்பன்காரி வெளியே வந்து சுற்று முற்றும் பார்த்தான். திறந்திருந்த துவாரம் அவன் கண்ணில் பட்டது. உடனே அவ்விடம் சென்று பலி பீடத்துக்குப் பக்கத்தில் நாட்டப் பட்டிருந்த சூலாயுதத்தைச் சுழற்றித் திருகினான்.

இடம் பெயர்ந்து அகன்றிருந்த யானையும் குதிரையும் மறுபடியும் நெருங்கி வந்தன. துவாரம் அடைபட்டு, இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டது.

இந்தக் காரியத்தைச் செய்து விட்டு இடும்பன்காரி மறுபடியும் கோவில் வாசற்படியண்டை வந்தான். அதே சமயத்தில் ரவிதாஸன், சோமன் சாம்பவன் முதலியவர்களும் வேறு திசையிலிருந்து வந்து சேர்ந்தார்கள்.

ஆழ்வார்க்கடியான் மூங்கில் காட்டுக்குப் பின்னால் இன்னும் நன்றாக மறைந்து கொண்டான்.

கோவில் வாசற்படிமேல் ரவிதாஸன் உட்கார்ந்து கொண்டான். மற்றவர்கள் அவன் எதிரே தரையில் அமர்ந்தார்கள்.

"தோழர்களே! நாம் கைக் கொண்ட விரதம் நிறைவேறும் சமயம் நெருங்கி விட்டது!" என்றான் ரவிதாஸன்.

"இவ்வாறுதான் ஆறு மாதமாக 'நெருங்கி விட்டது' 'நெருங்கி விட்டது' என்று சொல்லிக் கொண்டிருக்கிறோம்" என்றான் ஒருவன்.

"ஆம்; அதில் தவறு ஒன்றுமில்லை; ஆறு மாதமாகவே அந்த நாள் நெருங்கி வந்து கொண்டிருந்தது. இப்போது விரல் விட்டு எண்ணக்கூடிய நாள் கணக்கில் நெருங்கி விட்டது. ஆதித்த கரிகாலன் காஞ்சியை விட்டுக் கிளம்பி விட்டான் என்ற செய்தி வந்திருக்கிறது. திருக்கோவலூர்க் கிழவன் அவனைத் தடுத்து நிறுத்தச் செய்த பிரயத்தனம் பலிக்கவில்லையாம்!"

"வழியில் வேறு யாராவது தடுத்து நிறுத்த மாட்டார்கள் என்பது என்ன நிச்சயம்?"

"ஆதித்த கரிகாலன் முன் வைத்த காலைப் பின் வைக்கிறவன் அல்ல. இனி யார் தடுத்தாலும் கேட்கமாட்டான்..."

"அவனுடைய சகோதரி சொல்லி அனுப்பிய செய்தி போய்ச் சேர்ந்தால்..."

"அது எப்படிப் போய்ச் சேர முடியும்? செய்தி கொண்டுபோன வாலிபனைத்தான் காட்டில் கட்டிப்போட்டு விட்டு வந்தோமே?"

"அழகுதான்! அவனை இன்று காலையில் கொள்ளிடத்தின் வடகரையிலே பார்த்தேன். அவனோடு நமது இன்னொரு பகைவனும் சேர்ந்திருக்கிறான்......"

"அது யார்?"

"போலி வைஷ்ணவ வேஷதாரி!"

"அப்படியானால் நாம் ஜாக்கிரதையாயிருக்க வேண்டியதுதான். அவர்கள் ஆதித்த கரிகாலனைச் சந்திக்காமல் தடுக்கப் பார்க்க வேண்டும்."

"தும்பை விட்டு வாலைப் பிடிக்கிற கதையாக இருக்கிறது. கையில் அகப்பட்டவனை அங்கே ஒரு வழியாகத் தீர்த்திருக்கலாம். ராணி எதற்காக அவனை உயிரோடு விடச் சொன்னாள் என்று தெரியவில்லை......"

"தோழர்களே! எனக்கும் அது அப்போது புரியாமல்தான் இருந்தது. அப்புறம் தெரிந்து கொண்டேன். ராணி என்னையும் மிஞ்சி விட்டாள் என்பதை ஒத்துக் கொள்கிறேன். மிக முக்கியமான ஒரு நோக்கத்துடன்தான் வந்தியத்தேவனை உயிரோடு விட்டுவிடச் சொன்னாள் ராணி. அதை நீங்கள் இப்போது தெரிந்து கொள்ள வேண்டிய அவசியமில்லை. வந்தியத் தேவனைப் பற்றிக் கவலை வேண்டாம். ஆனால் அந்த வைஷ்ணவனைக் கண்டால் சிறிதும் தயங்காமல் உயிரை வாங்கி விட்டு மறு காரியம் பாருங்கள்......" என்றான் ரவிதாஸன்.



## பொடுகு அவ்வளவு அபாயகரமானதா?

நியூ ஸ்டாண்டர்டு என் சைக்ளோபீடியாவில் குறிப்பிட்டபடி "பொடுகு என்பது மண்டை உறையின்மேல் வரும் தொற்றுநோயாகும். அதைக் குணப்படுத்துவது கடினம். அதனாலேயே தலையில் **வழுக்கை** ஏற்படுகிறது. ஆனால் அது வராமல் தடுப்பதற்கு தொடர்ச்சியாக உபயோகிக்கவேண்டியது

Godrej ரிஜிஸ்டர்டு

# கோத்ரெஜ் ஹேர் டானிக்



ஏனெனில் அதில் ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் குணமளிக்கிறதென்று நிரூபிக்கப்பட்ட **ஜி-11** (உலகப் பிரசித்திபெற்ற பாக்டீரிசைட்) அடங்கியிருக்கிறது.

தலை மண்டைக்கு முற்றிலும் தீங்கற்றது. குளிர்ச்சியையும் புத்துணர்ச்சியையும் அளிப்பது உஷ்ணப் பிரதேசங்களுக்கு மிகச் சிறந்தது.

**இந்த ரகத்தில் கிடைக்கும் ஹேர் டானிக் இது ஒன்றேதான்**

கோத்ரெஜ் சோப்ஸ், லிட்.



ஜாம் - பக்
சீக்கிரமாகவே
குணப்படுத்தும்
நோய் நிவாரணி

எவ்வளவு விரைவில் ஜாம்பக்

## Zam-Buk

## வெட்டுக் காயங்கள், காயங்கள், மண்டைச் சொறி, நெருப்புக் காயங்கள்

ஆகியவற்றை
குணப்படுத்துகிறது என்று பாருங்கள்!

ஜாம்-பக் மூலிகை ஆயின்ட்மென்ட் விரைவாகவும், நிச்சயமாகவும் வேலை செய்கிறது: எப்படியெனில் அதன் ஔஷதச் செறிவு வாய்ந்த நோய் நிவாரணத் தைலங்கள் நோயுற்ற பாகங்களில் ஊடுருவிச் சென்று குணப்படுத்துகின்றன. ஜாம்-பக் வலியையும் புண்ணையும் குணமாக்குகிறது. ஆபத்து தரும் கிருமிகளை ஜாம்-பக் நாசம் செய்கிறது. அழுக்குக் கழிவுகளை உலர்ந்து போகவும் செய்கிறது. ஜாம்-பக் சருமத்தைப் பாதுகாத்து விரைவாகக் குணப்படுத்துகிறது. மீண்டும் ஆரோக்கியமாக இருக்கச் செய்கிறது. வெட்டுக் காயங்கள், காயங்கள், புண்கள், ரணங்கள் ஆணி, நமைச்சல், மற்றும் பல சரும நோய்கள், பூச்சிக்கடி ஆகியவற்றிற்கு ஜாம்-பக் உலகத்திலேயே சிறந்த நிவாரணியாகும். காலில் ஏற்படும் நோய்களுக்கும், மூலத்திற்கும் ஜாம்-பக் அற்புதமான நிவாரணியாகும்.




ஜாம்-பக் உலகத்தின் சிறந்த சரும ஆயின்ட்மென்ட்
மிருகக் கொழுப்புக் கலப்பற்றது என்பது உத்தரவாதம்

மதராஸிற்கு ஸோல் ஏஜண்டுகள்: தாதா & கம்பெனி, பார்க் டவுன் FZY 4

---

### வீட்டு சினிமா புரொஜக்டர்



இந்த போர்ட்டபிள் புரொஜெக்டரால் உங்கள் வீட்டிலேயே சினிமாப் படங்களைப் பார்த்து மகிழலாம். இதை மின்சாரத்தினாலும் டார்ச்சினாலும் இயக்கலாம். சினிமாபோன்று 35 m. m. பிலிமையே உபயோகிக்கலாம். திரையில் படங்கள் முழு அளவிலும் கலரிலும் சினிமா போலவே பார்க்கலாம். விலை ரூ. 12-8-0. வி.பி.பி. சார்ஜ் ரூ. 2-8-0 தனி. மேற்கொண்டு பிலிம் தேஜம் 1-க்கு அணா 8.

### புதுமாதிரி அமெரிக்கன் சிறிய ஸ்பிரிட் ஸ்டவ்



உங்களது சிற்றுண்டி, டீ, வெந்நீர் முதலியவைகளை தயாரித்துக் கொள்ள மிகவும் உபயோகமானது. இந்த ஸ்டவ்விற்கு கொஞ்சம் ஸ்பிரிட் செலவு செய்தால் உங்கள் வேலையை பூர்த்தி செய்யும். ஒன்றின் விலை ரூ. 6-0-0. வி. பி. பி சார்ஜ் ரூ. 1-8-0 தனி.

### எலக்ட்ரிக் & ரேடியோ கைடு

ரூ. 15 செலவில் உங்கள் சொந்த ரேடியோவை தயாரியுங்கள். வீட்டில் எலக்ட்ரிக் ஒயரிங், ரேடியோ ரிப்பேர் முதலிய எலக்ட்ரிக் சம்பந்தமானவைகள் எல்லாம் கற்றுக் கொண்டு மாதம் ரூ. 200 சம்பாதியுங்கள். விலை. ரூ. 4-0-0 தபால் செலவு ரூ. 0-12-0 தனி.

### எம்பிராயிடரி மிஷின்

நவீன ஆங்கில எம்பிராயிடெரி மிஷின். இதனால் அழகான பூக்களையும், கலர் படங்களையும் இயற்கை வர்ணனைகளையும் தைக்கலாம் ஒவ்வொரு வீட்டுப் பெண்களுக்கும் மிக உயர்ந்த பரிசு. விலை ஒன்றுக்கு ரூ. 6/8/- வி. பி. பி. சார்ஜ் ரூ. 1/8/- தனி. நூற்றுக்கணக்கான எம்பிராயிடரி டிஸைன் புஸ்தகம் ஒன்றுக்கு விலை ரூ. 2/8/-

### மைக்ராஸ்கோப்



தூரத்திலும் மலையிலுமுள்ள இயற்கை அழகைக் கண்டு மகிழலாம். தூரத்திலுள்ளதும், நுட்பமான சிறிய பொருள்களையும் மிக நன்றுகப் பார்க்கலாம். குதிரைப் பந்தயம், மலைப் பிரயாணத்திற்கும் மிக உகந்தது.
விலை ரூ. 6/- வி. பி. பி. சார்ஜ் 1/8/- தனி.

### 14 பாஷைகள் கற்கலாம்

குஜராத்தி. மராத்தி. தமிழ். பஞ்சாபி. ஹிந்தி முதலிய (14 பாஷைகளை) 48 மணி நேரத்தில் கற்கலாம். விலை ரூ. 5. போட்டோ கிராபிகலை ரூ. 3. சோப் செய்யும் முறை ரூ. 3. வாசனை திரவியங்கள் செய்யும் முறை ரூ. 3. தையல் & கட்டிங் ரூ. 3. டிராயிங் & பெயிண்டிங் ஆசான் ரூ. 4. கை வாழ்வு ரூ. 3. ஒவ்வொரு புத்தகத்திற்கும் வி.பி.பி. சார்ஜ் அணா 12 தனி.
கடிதங்கள் ஆங்கிலத்தில் எழுதப்பட வேண்டும்

**MILAP TRADING CO., (128K) KANWARIGANJ, ALIGARH U. P**

# புது வாழ்வு

கோமதி சுப்ரமண்யம்

வகுப்புத் தொடங்க இன்னும் அரைமணி நேரமிருந்தது. அன்றையப் பாடங்களைத் தயாரித்து விட்ட லலிதா இடைவேளையைப் போக்க மாலதியின் அறைக்குச் சென்றாள்.

தன் கவன முழுதையும் தன் கையிலிருந்த பொருளின் மீது பதித்து விட்ட மாலதி தோழி வந்ததை உணரவில்லை. அப்படி அவள் கருத்தைக் கவர்ந்து விட்ட பொருள் எதுவாயிருக்குமென அறிய விரும்பிய லலிதா அவள் அருகே சென்று கவனித்தாள். சிறிய உருவப் படத்தின் மீது மனத்தைப் பதியவிட்ட மாலதி தோழியின் வரவை அறிய நியாயமில்லை. தன் கருத்தைக் கவர்ந்த பொருளை அவள் கையிலிருந்து பறித்த போது தான் அது யாரென அறிய தலை நிமிர்ந்து பார்த்தாள். அவளுக்கு வந்த கோபத்திற்கு மாணவிகளுள் ஒருத்தியாக மட்டும் இருந்திருந்தால் இன்று கட்டாயம் சரியான உதைவாங்கி இருப்பாள்.

எதிரே நின்றவள் தன்னுடன் வேலைசெய்பவள். அதுவும் அவள் உயிர்த் தோழி லலிதா என்று அறிந்த போது எதுவும் பேச முடியாமல் நின்று விட்டாள். படத்தைப் பறித்த போதிருந்த உற்சாகம் படத்தைப் பார்த்தவுடன் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டது லலிதாவுக்கு. உற்றுக் கவனித்த லலிதா திடுக்கிட்டாள். ஒரு கணத்தில் ஆயிரமாயிரம் இடிகள் தலையில் விழுவது போல் உணர்ந்தாள். வானமே இடிந்து தலையில் விழுவதைப் போலுணர்ந்த லலிதாவிற்கு இவ்வுலகமே சுழல்வது போல் தோன்றியது. தன் வியப்பை வெளிக் காட்டாதிருக்க லலிதா அவ்விடத்தினின்றும் நகருவது உசிதமென நினைத்தாள்

''...ம்...மாலதி...உன் தனிமையைக் கலைத்ததற்காக மன்னிக்கவும். எனக்கு ஒரு அவசர வேலை இருக்கிறது. நான் வருகிறேன்'' என்று கூறியவள் நடுங்கும் கரங்களுடன் படத்தை மேஜைமீது வைத்து விட்டு அப்பால் நடந்தாள்.

லலிதாவின் திடும்பிரவேசம், வெடுக்கென படத்தைப் பிடுங்கியது, படத்தைப் பார்த்தவள் எதுவுமே அபிப்பிராயம் கொடுக்காததோடு செய்யத்தகாத காரியம் செய்து விட்டவளைப் போல் ஓடிப் போன அவள் செய்கை, எல்லாம் புதிர்போல் தோன்றியது மாலதிக்கு.

அப்போதிருந்த அவளது உற்சாக நிலையில் அப்புதிருக்கு விடைதேட அனுமதி கொடுக்கவில்லை அவளது மனம். அதோடுகூட வகுப்புத் தொடங்கவும் நேரமாகிவிடவே படத்தை மடித்து வைத்துவிட்டுப் பாடத்தைத் தயாரித்தாள் மாலதி.

வழக்கம்போல் வகுப்பு நடந்து கொண்டிருந்தது. சற்று முன் வீசிய புயல்காற்றினால் லலிதாவின் மனம் பாடத்தில் செல்ல மறுத்துவிட்டது. யந்திரம்போல் பாடத்தை நடத்திய லலிதா வகுப்பு முடியும் மணி அடித்ததும் வீட்டை நோக்கி விரைந்து நடந்தாள்.

சில தினங்களுக்கு முன் மாலதி தனக்கு விவாகம் சீக்கிரத்தில் முடியப் போகிறதென்றும் பிள்ளையின் படம் இன்னும் சில தினங்களில் அப்பா அனுப்புவதாக எழுதி யிருப்பதாகவும் சொன்னாள். அந்தப் பிள்ளை தன்னுடைய கணவனாக இருக்கும் என்பதை லலிதா எதிர்பார்த்திருந்தாளா...! தெரிந்திருந்தால், அந்தப் படத்தை ஏன் தொடப்போகிறாள். யதேச்சையாக மாலதியின் அறைக்குப் போக, சந்தர்ப்பம் அப்படி மாட்டி வைத்துவிட்டது. இதைத்தான் விதி யென்பதா! பாழும் விதி இப்படியா குறுக்கிட்டுச் சதி செய்ய வேண்டும்.

இவ் விஷயத்தை அம்மாவிடம் கூறுவதா வேண்டாமாவெனத் தயங்கிய லலிதா கடைசியில் கூறி விடுவது என்ற முடிவுக்கே வந்தாள்.

அம்மா அதை அறிந்தபோது லலிதாவைப் போல் தூக்கிவாரிப் போட்டு நிற்கவில்லை. அப்படி நடக்குமென எதிர்பார்த்தவளைப் போலிருந்தது அவள் பேச்சு.

''எனக்குத் தெரியும் இப்படியெல்லாம் ஆகுமென்று. நான் சொல்வதை யாராவது லக்ஷ்யம் செய்தால் தானே......! அப்பாவும் பெண்ணுமாகச் சேர்ந்து கொண்டு இல்லாத நாடகமெல்லாம் நடித்தீர்கள். இப்பொழுது நாடகத்தின் சோகக் கட்டம் துக்கப்படுவதில் பயனென்ன!'' என்ற பாணியில் பேசினாள்.

இதையா எதிர்பார்த்தாள் தாயாரிடம், இப்படித் தன் செய்கையை குத்திக் காட்டுவாள் என்பது தெரிந்திருந்தால் தாயாரிடம் கூறியிருக்கவேமாட்டாள். தன் மனமே அதிர்ந்து போயிருக்கும்போது தாயாரின் பேச்சு சூடு கொடுக்கவே பொறுக்க முடியாமல் திணறினாள்.

''உரிமை பறிபோக இடம் கொடுத்துவிட்டு இப்பொழுது உட்கார்ந்து அழுவதினால் யாருக்கு பிரயோஜனம்! இந்த மட்டும் கண்ணைக்கெடுத்த தெய்வம் மதியைக் கொடுத்தாப்போலே கலியாணம் முடியுமுன்னேயாவது தெரிந்ததே''...என்று கூறவும் அம்மா மேலே என்ன செய்யப் போகிறாள் என்பதை உணர்ந்து கொண்டாள் லலிதா.

''அம்மா நாம் இடையே குறுக்கிட்டு மாலதியின் விவாகத்தை நிறுத்த வேண்டாம். நான் ஒதுங்கியவள் ஒதுங்கியே இருந்து விடுகிறேன். அவர்களாவது சுகவாழ்வு வாழட்டும்'' என்று வாதாடினாள்.

''லலிதா! போதும் உன் பிதற்றல். இனியும் உன் பேச்சைக் கேட்டுக்கொண்டு உன் போக்குக்கு விட்டுவைக்கப் போவதில்லை. பெற்ற பெண்ணின் வாழ்வில் மண் விழப் போவதை அறிந்த எந்தத் தாயாரும் அதைத் தடுக்க முயற்சி செய்யாமலிருக்கமாட்டாள். நானும் என் கடமையைச் செய்து தீருவேன். மற்றது உன் விதிப்படி'' என்று தாயார் உணர்ச்சி மேலிட்டுக் கூறி அவ்விடம் விட்டகன்றாள். தன் இறந்த கால நினைவில் மூழ்கினாள் லலிதா.

*

பகல் முழுதும் தீப்பிழம்பாகத் தகித்துக் கொண்டிருந்த கதிரோன் மாலை நெருங்கவும் மெல்ல மெல்ல மறைந்து கொண்டிருந்தான். ஆதிக்கத்தின் கடைசி நேரத்திலும் கூடத் தன் உக்கிரத்தைக் குறைத்துக் கொள்ள விரும்பாததைப் போலக் கடுமையாகத் தகித்துக் கொண்



அப்பா : கிட்டு, இன்று காலைப் பேப்பரைப் பார்த்தாயா?

கிட்டு : பார்த்தேனே! அதில் அப்படி விசேஷமாக ஒன்றும் இல்லையே!

அப்பா : போடா, என் மேஜை மேலேயிருந்த பேப்பர் எங்கே என்று கேட்கிறேன்!

டிருந்தது வெப்பம். வெயிலின் கடுமையைத் தாங்கமாட்டாத மக்கள் புழுக்கத்தால் வாடிச் சுருண்டு கொண்டிருந்தனர்.

மாடி அறையில் படுத்திருந்த லலிதாவையும் அவ்வெப்பம் தாக்கவே தன்மேல் போர்த்தியிருந்த போர்வையைச் சற்றே விலக்கினாள். தினமும் மத்தியானம் இரண்டு மணிக்குத் தொடங்கும் குளிர்க் காய்ச்சல் சாயந்திரம் ஆனதும் படிப் படியாகக் குறைந்துவிடும். சுரம் இறங்குகிற நேரத்தில் அவள் உடம்பில் வியர்வை வெள்ளமாகப் பெருகிவிடும். அதன் பிறகே அவளுக்குச் சுயநினைவு வரும்.

அன்றும் அப்படித்தான். சுரம் விட்டிருந்த வேகத்தாலும் இயற்கையின் உஷ்ணத்தாலும் அவள் உடம்பு முழுவதும் வியர்வைக் கொட்டிப் போயிருந்தது. தன்மேல் போர்த்தியிருந்த போர்வையை நீக்கிவிட்டு எழுந்து உட்கார்ந்த லலிதா வெப்பத்தைத் தாங்கமாட்டாமல் தடுமாறினாள்.

பகல் முழுவதும் படுக்கையிலேயே கிடந்து விட்ட அலுப்பு காரணமாக எழுந்து நடமாட வேண்டுமென்று தோன்றியதால் படுக்கையை விட்டு எழுந்து அப்படியும் இப்படியும் நடந்தாள். தாகத்தில் நாவரண்டு கிடந்தது. மேலே யாராவது வரமாட்டார்களா என்று எதிர்பார்த்த அவள், யாரும் வராமற் போகவே தானே கீழே இறங்கிப்போய்த் தண்ணீர் குடித்து விட்டு வர விரும்பினாள். மெல்ல மெல்ல படியிறங்கிய லலிதா கீழே தன் கணவனும் மாமியாரும் பேசும் குரலைக்கேட்டு நின்று கவனித்தாள். வெளியினின்று வந்ததும் தன்னைப் பார்க்க வரும் கணவன் நின்று பேசிக் கொண்டிருக்க வேண்டுமானால் விஷயம் முக்கியமானதாகத் தானிருக்க வேண்டும். அவர்கள் பேச்சின் நடுவே தன்னுடைய பெயரும் கலந்து வந்ததால் நின்று கவனித்தாள்.

அவர்கள் பேசுவதைக் கேட்க வேண்டுமென்பதற்காக அவள் இறங்கி வரவில்லை. சந்தர்ப்பம் அப்படித் தூண்டி விட்டிருந்தது.

"ரகு...நான் சொல்லுகிறேனே என்று வித்தியாசமாக நினைத்துக் கொள்ளாதே...உன் மனைவிக்கு வந்திருக்கும் வியாதி லேசானதல்ல..." இது அவன் தாயாரின் குரல்.

"ஏனம்மா! டாக்டர் என்ன சொன்னார்!" என்று பதற்றத்துடன் எழுந்தது அவன் கேள்வி.

"அவர் ஒன்றும் சொல்லவில்லை. அவர் சொல்லாமல் சொன்ன விதத்திலிருந்தே நான் புரிந்து கொண்டு விட்டேன். வெறும் ஜலதோஷம், இருமலா[யிருந்தால் இன்னுமா குணமாகாளிருக்கும்!"

"எதுவாயிருந்தால்தான் நாம் என்ன செய்ய முடியும் அம்மா...!" என்றான் மகன்.

"அப்படிச் சொல்லாதே ரகு. நான் கூறுவதற்காக வருத்தப் பட்டுக் கொள்ளாதே" என்ற பீடிகையுடன் தொடங்கினாள். இன்னும் என்ன சொல்லப் போகிறாளோ என்று துடித்து நின்றாள் லலிதா.

"உன்னையும் உன் மனைவியையும் பிரித்து வைப்பதில் எனக்கென்ன லாபமிருக்கப் போகிறது! நீ அவளை அதிகம் நெருங்க வேண்டாமென்பதுதான் என் அபிப்பிராயம். இவள் போனால் ஆயிரம் மனைவி தேடலாம். ஆனால் நீ எனக்கு ஒரு பிள்ளை என்பதை மறந்து விடாதே!"

"நிறுத்தம்மா உன் பேச்சை. நீ என்ன சொன்னாலும் என் லலியை நெருங்காமல் என்னால் இருக்கவே முடியாது. வியாதி வந்தால் அதற்காக அவளை அப்படியே ஒதுக்கித் தள்ளிவிட முடியுமா!" உணர்ச்சியோடு எழுந்தது அவன் கேள்வி. அதற்கு மேலும் அங்கே நிற்க விரும்பாதவனும் மாடிக்குப் புறப்பட்டான். அவன் மாடிக்கு வருவதற்குள் மேலே போய் விட வேண்டுமென்று நினைத்த லலிதா தன்னைத் திடப்படுத்திக் கொண்டு மாடிக்குத் திரும்பினாள்.

தாயார் கொடுத்த காப்பியைச் சாப்பிட்டு விட்டு ரகு மேலே வருவதற்குச் சற்றுத் தாமதமாகியது.

மெல்ல மெல்ல படியேறிய லலிதா தன்னைச் சமாளித்துக் கொண்டு படுக்கையில் படுத்துப் போர்வையை இழுத்து நன்றாக முகத்தை மூடிக் கொண்டாள்.

தினமும் கணவன் வரவை எதிர்நோக்கிக் காத்திருக்கும் மனைவி இன்று தன்னை மறந்து தூங்கிக் கொண்டிருந்தது அவன் மனத்திற்குச் சற்று ஆறுதலாக இருந்தது. ஒரு வேளை தாயாரும் தானும் பேசிக்கொண்டிருந்ததை லலிதா அறிந்தாளோ என்ற சந்தேகம் அவன் நெஞ்சை உறுத்திக் கொண்டிருந்தது. நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்த மனைவியைக் கண்டதும் அவன் மனத்தின் பாரம் நீங்கி நிம்மதி பிறந்தது. அறையில் குறுக்கும் நெடுக்கும் அலைந்தவாறே தன் மனத்தின் சிந்தனைக்கு வழி வகுத்துக் கொடுத்த ரகு சிறிது நேரத்திற்குப் பிறகு மனைவியின் அருகே அமர்ந்தான். அப்பொழுதும் அவள் எழுந்திருக்காதிருக்கவே அருகில் சென்று அவளை எழுப்ப நினைத்தான்.

தன்னருகே கணவன் வந்து நின்றதை உணர்ந்து கொண்ட லலிதா அவன் எழுப்பு முன்னதாகவே எழுந்து விட்டாள். தூங்கினால் அல்லவா அவளை எழுப்பும் வரை காத்திருக்க வேண்டும். உள்ளத்தே ஆயிரமாயிரம் எண்ணங்கள் சல்லடைக் கண்களாகத் துளைக்கும்போது அவளுக்குத் தூக்கம் எங்கிருந்து வரும்!

சடக்கென எழுந்த அவள், அவன் எடுக்கு முன்பாக மருந்து பாட்டிலை எடுத்து அளவுப்படி வாயில்விட்டுக் கொண்டதைக் கண்ட ரகு அப்படியே ஸ்தம்பித்து நின்றான்.

ஒருவேளை...! ஒருவேளை! தாயார் சொல்லியது அவன் காதுக்கும் எட்டியிருக்குமோ!

"என்ன அப்படிப் பார்க்கிறீர்கள்! உங்களுக்குச் சிரமம் கொடுக்க வேண்டா மென்றுதான் நானாக எடுத்துச் சாப்பிட்டு விட்டேன். அதிருக்கட்டும். ஆபீசிலிருந்து வந்தவர்கள் சற்று உலாவி விட்டு வந்தால் என்ன! எதற்காக இப்படிச் சாயந்தர நேரத்தில் வீட்டையே காத்துக் கிடக்க வேண்டும்!" என்று சிரித்த முகத்துடன் கூறியவளைக் கேட்டபோது 'சுருக்'கென்று தைத்தது அவனுக்கு.

அவள் பேசுகிற ஒவ்வொரு வார்த்தையும் கள்ளம் கபட மற்றதாக இருக்க முடியுமா! ஐயமுற்றது அவன் மனம்.

"என்ன இன்றைக்கு உன் பேச்சே ஒரு தினுசாக இருக்கிறதே. உன் செய்கையில் கூடத்தான்" என்று கூறியவன் மேலே எதுவும் பேசமுடியாமல் அங்குமிங்கும் உலாவினான்.

"நான் என்றும் போலவேதான் இருக்கிறேன். ஆனால் பார்க்கும் உங்களது கண்கள்தான் வித்தியாசம் கற்பித்திருக்க வேண்டும். அப்படித்தானே!" என்றவள் வலிய சிரிப்பை வரவழைத்துக் கொண்டு சிரித்தாள்.

அவனுக்கு, அவளுடன் சேர்ந்து சிரிப்பதா, அவளைப் பிடித்திருக்கும் வியாதியை நினைத்து அழுவதா என்று ஒன்றும் தோன்றாமல் திகைத்தான். எதற்கும் சக்தியற்றவனாக இருந்த அவனை, அவனது வார்த்தையே கடற்கரைப் பக்கம் இழுத்துச் சென்றது. கடற்காற்றின் இனிய ஸ்பரிசத்திலே தன் மனத்துயரை போக்கிக் கொள்ளலாம் என்று கருதியவன்போல் கடற்கரையை நோக்கி நடந்தான்.

சேவலை யற்றிருந்த மனதில் கவலையின் வித்து பதிந்து விட்டது. செடி கப்பும் கிளையுமாகக் கிளம்ப வேண்டியதுதானே! அதன் பிறகு நிம்மதியாகச் சென்ற அவர்கள் வாழ்வில் சிறுசிறு பூசல்கள் தலை தூக்கின. லலிதாவுக்குப் பிரசவமாகி இன்னும் ஐந்து மாதம் முடியவில்லை. பிரசவம் ஆன முப்பதாம் நாளிலிருந்தே லேசாக முறை ஜுரம்போல் வரத் தொடங்கிற்று. அதோடு ஜலதோஷமும் சேர்ந்து கொண்டால்! அடிக்கடி கபமும் ஜுரமும் வரலாயிற்று. இவ்வாறு அடிக்கடி காய்ச்சலும் கபமும் வரத் தொடங்கவே, மனதில் ஒருவித சந்தேகத்துடனே டாக்டரை அழைத்து வந்து 'பரிசோதிக்கச் செய்தாள் மாமியார். டாக்டர் வியாதியின் நுட்பத்தை ஆராய்ந்தாரோ இல்லையோ, ஆனால் முறையாக வருகிற காய்ச்சலையும் அவளுக்கு இருந்த இருமலையும் கொண்டு. டி. பி. யாக இருக்கலாமோ என்ற சந்தேகத்தை மாமியாரின் மனத்தில் புகுத்திவிட்டார். கேட்கவேண்டுமா! லலிதா அறியாவண்ணமே அவள் உறவை ஒதுக்க நினைத்து மாடியில் அவளுக்கென தனியறை ஒதுக்கிக் கொடுத்தாள். வீட்டு மனிதர்கள் யாரும் அவளை நெருங்கிப் பேசாமல் தன்னா லியன்றவரை காத்துவர வேண்டு மென்ற உறுதியையும் ஏற்படுத்திக் கொண்டாள். அதன் விளைவுதான் தாய்க்கும் மகனுக்கும் நடந்த சம்பாஷணை.

கணவனும் கொஞ்சம் கொஞ்சமாகத் தன்னை விட்டு விலகிப் போவதை உணர்ந்தாள். அவளால் வேறு என்ன செய்ய முடியும்! அவரது தாயார் கூறியதைப் போல, ஆயிரம் மனைவிகள் அவருக்குக் கிடைக்கலாம். ஆனால் அவர் தாயாருக்கு ஒரு பிள்ளைதானே. அதை இழக்க பற்று மனம் சகிக்குமா! ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால் அந்த நீதி என் தாயாருக்கு இல்லையா! பெண்ணைப் பெற்றுவிட்டதானால் அவள் மனம் மட்டும் துடிக்காதா! அதுதான் போகட்டும். பெற்ற என் குழந்தையைக் கூட அல்லவா என்னை விட்டுப் பிரிக்கிறார்கள். குழந்தை எனக்கு மட்டும் இல்லையா என்ன! நான் வியாதிக்காரி என்றே வைத்துக் கொள்ளுவோம். அதற்காக ஆசையும் பாசமும் மரத்துப் போகுமா! நான் பெற்ற என் செல்வத்தை எடுத்து மகிழ வேண்டுமென்று என் உள்ளம் துடியாய்த் துடிக்கிறது. கொஞ்சும் அதன் மழலையைக் கேட்க என் செவிகள் தவியாய்த் தவிக்கின்றன. இதற்குக் கூடவா தடையுத்தரவு' என்று துடியாய்த் துடிப்பாள். எத்தனை தான் மனசைக் கட்டுப் படுத்தினாலும், பெற்ற பாசம் கட்டுமீறிப் புறப்பட்டுவிடும். "கண்ணன் என்ன செய்கிறான். அவனை நான் பார்க்கவேயில்லையே, அவனுடன் விளையாடி எத்தனையோ நாட்கள் ஆகிவிட்டனவே. சற்று எடுத்து வந்து என்னிடம் கொடுங்கள்" என்று மாமியாரிடம் கெஞ்சுவாள். குழந்தை தூங்குகிறது. அதைச் சிரமப்படுத்த வேண்டாமென்ற பொய்யைத் தயங்காமல் கூறிவிடுவாள் மாமியார்.

தன்னைப் பயங்கர வியாதி பிடித்திருப்பதற்காக, அவள் வருந்தவில்லை' தான் விரும்பிய மனிதர்கள் தன்னை வெறுப்பதற்காகவோ கட்டிய கணவனே தன்னைவிட்டு ஒதுங்குவதற்காகவோ அவள் வருந்தவில்லை. ஆனால் தான் பெற்ற செல்வம், தன் அருமைக் கண்ணனை அவளிடமிருந்து பிரிப்பதை, அவள் பார்வையிலிருந்து மறைப்பதைத் தாங்க முடியாது வருந்தினாள். இந்த அநீதிக்கு எல்லையே இல்லையா! நீதி நியாயமே மறைந்து




"என்ன, வாசல் கேட்டிலிருந்து 'நாய், ஜாக்கிரதை!' என்ற போர்டை ஐந்தாறு இடத்தில் மாட்டி யிருக்கிறீர்களே! அந்தப் பயங்கர நாய் எங்கே? பார்க்கலாமா?"

"இல்லை, இல்லை! அது அப்படி ஒன்றும் பயங்கரமான நாய் இல்லை. அதோ அங்கே விளையாடுகிறதே, அந்தச் சின்ன நாய்க் குட்டிக்காகத் தான் போர்டு போட்டிருக்கிறேன். யாராவது நாய்க் குட்டியை மிதித்து விட்டால் என்ன செய்வது!"

விட்டதாக நினைத்துப் புலம்பிய அவள் மனத்தில் புதிய யோசனை ஒன்று உதித்தது.

**த**ன்னை விட்டுத் தூர விலகிச் செல்லும் கணவனை ஒருநாள் தன் அருகே அழைத்தாள். "எனக்கு ஒரு விருப்பம். நிறைவேற்றித் தருவீர்களா!" என்று கெஞ்சிய மனைவியின் அருகில், வேண்டா வெறுப்பாய் வந்தமர்ந்தான் ரகு. "அம்மாவை வரச் சொல்லி ஒரு கடிதம்......" என்றாள்.

"கடிதம் என்ன தந்தியே கொடுத்துவிடுகிறேன், நான் வரட்டுமா. ஆபீஸுக்கு நேரமாகிவிட்டது" என்று கூறி மேலே நிற்கப் பிடிக்காதவனைப்போல் அவ்விடம் விட்டு அகன்ற ரகுவைக் கண்டு பெருமூச்சு விட்டாள் லலிதா. தன்னைவிட்டு அரைக் கணமும் பிரியாதிருந்த ரகுவா இப்படிச் செல்கிறான்.

அல்லும் பகலும் அறுபது நாழிகையும் அவள் படுக்கையைச் சுற்றி சுற்றி வந்த ரகுவா அவன்! மணிக் கணக்குப்படி மருந்தை எடுத்து வாயில் ஊற்றுவான். வேளா வேளை கஞ்சியோ ஆரஞ்சுப் பழமோ கொடுக்க வேண்டியதைத் தன் கைப்படக் கொடுப்பதில்தான் அவன் மனம் திருப்தியடையும். அப்படியிருந்த ரகுவா இன்று அரை நிமிஷம் நின்று பேசக்கூட விரும்பாதவனைப்போல் செல்லுகிறான். இதற்கெல்லாம் காரணமான வியாதியை நொந்து கொள்வதைத் தவிர, வியாதியையும் அவளையும் சேர்த்துப் படைத்த கடவுளை நொந்து கொள்வதைத் தவிர வேறு என்ன செய்ய முடியும் அவளால்!

தனக்கு வந்த வியாதி தன் கணவனுக்கு வந்திருந்தால் தன்னால் விலகிப் போக முடியுமா! ஒரு கணம், ஒரே கணந்தான் அந்தச் சிந்தனை. வேண்டாம், வேண்டாம். அவருக்கு இந்த வியாதி வரவே வேண்டாம். தன்னைக் கெடுத்த வியாதி தன்னோடு மடியட்டும் என்றுதான் நினைத்தாள்.

மாமியார் சொல்வதைப் போல் தன்னிடம் நெருங்குவதால் அவருக்கும் அந்த வியாதி வந்து விட்டால் அவரைத் தன்னிடம் நெருங்கவிடாதபடி காக்க வேண்டியது தன்னுடைய கடமையாக இருக்க, அவர் ஒதுங்கிக் கொள்வதற்காகக் குறைப்படுவது எத்தனை மதியீனம் என்று நினைத்தாள். இனி இங்கிருக்கும் ஒவ்வொரு நிமிஷமும் ஆபத்தானது என்று தோன்றியதால் அந்த க்ஷணமே தன் தாயை வரவழைத்துப் பிறந்த வீடு செல்லத் தீர்மானித்து விட்டாள்.

**ப**ல முறை திரும்பி அழைத்தாலும் அனுமதி தர மறுக்கும் சம்பந்தி அம்மாள், இப்பொழுது தானாகவே பெண்ணை அனுப்ப முன் வந்தது மீனாட்சியம்மாளுக்கு வியப்பாகவே இருந்தது. மகள் தன்னுடன் வருகிறாள் என்ற பெருமையில வியப்பை வெளிக்குக் காட்டிக் கொள்ளவில்லை. தன்னை வலிய கட்டித் தாயாருடன் அனுப்பும் போது, தன் குழந்தையைத் தர மறுப்பார்கள் என்பதை லலிதா எதிர்பார்க்கவில்லை. "கண்ணன் இங்கேயே இருக்க வேண்டியவன், நீ மட்டும் போய் உடம்பைத் தேற்றிக் கொண்டு வா" என்று நிர்த்தாக்ஷண்யமாகக் கூறிவிட்டாள் மாமியார். பன்முறை கெஞ்சியும் குழந்தையைத் தர மறுத்த போது லலிதாவின் பெற்ற மனம் துடித்தது. பின்னைப் பாசம் பலமாகியது. "தாய் எங்கிருக்கிறாளோ அங்கேதானே குழந்தையும் இருக்க வேண்டும்" என்று வாதாடினாள்.

"தாய் குழந்தையை எடுத்து வளர்க்கும் சக்தியற்ற நிலையில் இருக்கும்போது குழந்தையைத் தொட அவளுக்கு உரிமை ஏது!" என்று மறுப்புக் கூறினாள் அவளுடைய மாமியார்

கணவனும் அதை ஆமோதித்ததை அவள் பொருட்படுத்தவில்லை. 'உன் வியாதி அவனுக்கும் ஒட்டிக் கொள்ளவா!' என்ற அவன் கேள்வி சாட்டையாகப் பாய்ந்தது. வானமே இடிந்து தலையில் விழுந்தாற்போல் இருந்தது. கூடவே, அவர் கூறுவது உண்மை என்ற உணர்வும் ஏற்பட்டது. அவள் ஒருத்தி வியாதியால் அழுந்துவது போதாதா! ஒன்றுமறியாத அந்தச் சிசு அக்கொடிய நோய்க்குப் பலியாக வேண்டுமா! பெற்ற குழந்தையின் நன்மைக்காக இச் சிறு தியாகம் கூடவா செய்யக் கூடாதென்று மனத்தைத் திடப் படுத்திக் கொண்டாள்.

மாமிக்கும் மருமகளுக்கும் இடையே நடந்த இத்தனைப் போராட்டங்களையும் தன் தாயார் அறியாவண்ணம் மறைத்து விட்டாள் லலிதா. தானே கண்ணனை அங்கு விட்டு வருவதாகவும் தாயார் நம்பும்படியாகச் சாமர்த்தியாகப் பேசி, தாயாருடன் தானும் புறப்பட்டுச் சென்றாள்.

எத்தனைதான் மறைக்க முயன்றாலும் தானாகவே எழும் பின்னைப்பாசம் அவள் இதயத்தை வதைத்தெடுத்தது. ஒரு நாள் சகல விவரங்களையும் தாயாரிடம் கூறித் தாயின் மடியில் முகத்தைப் புதைத்துக் கொண்டு கேவிக் கேவி அழுதாள்.

"அடி பெண்ணே, பாவிப் பெண்ணே! இந்த விஷயங்களையெல்லாம் ஏன் அங்கே வைத்து என்னிடம் சொல்லவில்லை. உனக்காவது டி. பி யாவது! எனக்கும் உன்னைப் போல்தான் குழந்தை பிறந்து ஒரு வருஷம் வரை உடம்பு பலஹீனத்தால் இப்படி அடிக்கடி ஜுரம் வருவதுண்டு. இதைப் போக்கக்கூடிய அருமையான மருந்து என்னிடம் இருக்கிறதே. ஆரம்பத்திலேயே சொல்லியிருந்தால், இதற்குள் உன்னைப் பிடித்திருக்கும் வியாதி இருந்த இடம் தெரியாமல் மறைந்து போயிருக்குமே. நீ ஏதேதோ மருந்தெல்லாம் சாப்பிட்டு வருகிறாயே, அவை உயர்ந்த மருந்தாக இருக்குமே என்றுதான் நான் கவனிக்காமல் இருந்து விட்டேன். அந்த மருந்துகள் பணத்தில்தான் உயர்ந்தவை போலும். நான் கொடுக்கும் மருந்தை ஒருவாரம் சாப்பிட்டுப் பார்; அப்புறம் சொல்லுவாய் அதன் குணத்தை" என்று கூறித் தன் கைவசமுள்ள மருந்தைக் கொடுக்க ஆரம்பித்தாள்.

* * *

**ம**ருந்தில் நம்பிக்கை இருக்கிறதோ இல்லையோ; ஆனால் அம்மாவின் சொல்லில் நம்பிக்கை வைத்த லலிதா தாயார் கொடுத்த மருந்தை ஒழுங்காகச் சாப்பிட்டு வந்தாள். சாப்பிட்ட ஒரு வாரத்திற்குள்ளாகவே, உடம்பிலே புதியதோர் பலம் தோன்றுவதை உணர்ந்தாள். தன் உடலில் தோன்றும் மாறுதலைக் கண்டு மனமகிழ்ந்த லலிதா, தொடர்ந்து அந்த மருந்தையே சாப்பிட்டு உடம்பைத் தேற்றி வந்தாள். அவள் உடலை வருத்திய வியாதி அவள் உடலை விட்டு அகன்று விட்டது. ஆனால் மனத்தை வருத்திய வியாதி அகல மறுத்துவிட்டது.

பிறந்த வீட்டுக்கு வந்து இரண்டு மூன்று மாதத்திற்கெல்லாம் ஒரே ஒரு கடிதம்தான் கணவனிடமிருந்து வந்தது. அதுவும் இரண்டே வரியில் 'உடம்பு சௌக்கியமா' என்று எழுதியிருந்தது. இதையா எதிர்பார்த்திருப்பாள் ஒரு மனைவி! அவளது உழைப்புத் தேவையாக இருந்த காலத்தில், அவளிடம் உயிரையே வைத்திருந்த ரகு, அவளுக்கு வியாதி என்று அறிந்த

தும் அவனை அடியோடு வெறுத்து விடுவான் என்பதை யாரும் எதிர்பார்க்கவில்லை. முக்கியமாக அவள் எதிர்பார்க்கவே யில்லை. ஆனால் இடிந்து விட்ட மதில் சுவரை மீண்டும் கட்டி விட முடியுமா!

முடியாது என்பதை நிரூபிக்கத் துடித்தாள் லலிதா. 'உனக்குத்தான் உடம்பு குணமாகி விட்டதே உன் கணவன் வீட்டுக்குச் செல்லத் தோன்றவில்லையா' என்று மறைமுகமாகவும் நேரடியாகவுமே பலமுறை கேட்டு விட்டார்கள் பெற்றோர்கள். அவர்களுக்கு அவள் அளித்த பதில் இதுதான்:

"உடம்பில் தோன்றிய வியாதி என்னை விட்டு மறைந்து விட்டாலும், அவர்களது அற்ப குணத்தினால் என் மனத்தில் தோன்றிவிட்ட வியாதி என்னைவிட்டு மறையாது. உள்ளத்தில் களங்கத்தை வைத்துக் கொண்டு முன்போல் சந்தோஷ வாழ்க்கை யடைந்துவிட முடியாது. களங்கமற்ற அன்பு நிறைந்தவராக இருந்தபோது என் கணவர் என் கண்களுக்குத் தெய்வமாகத் தோன்றினார். அதே கணவர்தான் இன்று என் கண்களுக்கு அவருடைய கபடம் நிறைந்த மனத்தினால், கல்லாகத் தோன்றுகிறார். இனி தெய்வாம்சம் காண முடியாது. களங்கமுள்ள அன்பு வாழ்க்கை வெறும் பாலைவனத்துக்குச் சமானம். அந்த வாழ்வை நான் வெறுக்கிறேன்."

இவ்வாறு கூறி கணவன் வீட்டுக்குச் செல்ல மறுத்துவிட்டாள். தனக்கு டி. பி. இல்லையென்பதையோ, அவள் முன்போல் திடமாகி விட்டதையோ கணவனுக்கு யாரும் அறிவிக்க கூடாதென்றும் எச்சரிக்கை செய்துவிட்டாள். தன் மகனை நிராதரவாக விட்டுவிடத் துணிந்துவிட்ட சம்பந்தி வீட்டாரிடம் பழிவாங்கும் எண்ணத்தோடு, மகளின் மனப்போக்கை ஆதரித்தனர் பெற்றோர்களும்.

லலிதாவின் யோசனைப்படியே அவளை டி. பி. ஆஸ்பத்திரியில் சேர்த்திருப்பதாகவும் மருமகனுக்குக் கடிதம் எழுதிவிட்டனர். இந்தக் கடிதத்திற்குப் பின்னர், க்ஷேமத்தின் விபரம் கேட்கும் பழக்கத்தைக்கூட விட்டு விட்டான். அவன் உறவையே அறுத்துக்கொண்டு வாழத் தீர்மானித்து விட்ட ரகு ஏன் கடிதம் எழுதப் போகிறான்! நாளடைவில் 'ரகுவுடன் வாழப்போவோம்' என்று ஆசைப்படுவது முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்படுவது போல் ஆகும். ஆகவே, அவனை மறந்து விடுவதே நல்லது என்ற உறுதிக்கு வந்தாள் லலிதா. அந்த உறுதியில் நிலைத்து நிற்க, அவள் ஒரு பெண்பாடசாலையில் ஆசிரியராக அமர்ந்தாள். பள்ளிச் சிறுமிகளின் உற்சாக வாழ்வில் அவளும் பங்கெடுத்துக் கொண்டாள்.

இப்படித் தான் விவாகமானவள் என்பதை அடியோடு மறக்கத் திட்டமிட்டுக் கொண்டிருந்த லலிதாவின் கண்ணில் அன்று ரகுவின் படம் பட்டதும் அவள் மனதிலே பெரும் புயல் வீசத் தொடங்கி விட்டது.

*

படத்தைப் பார்த்ததும் லலிதா நேரடியான அபிப்பிராயம் கூறுததோடு அவள் கண்ணில் துளித்த நீரைக் கண்டதும், மாலதி அவள் மனதைப் புரிந்து கொண்டாள். படத்திலிருக்கும் மனிதருக்கும் அவளுக்கும் சம்பந்தம் இருக்க வேண்டும். இதைச் சொல்லாமலே உணர்ந்து

கொண்டாள். தன் சந்தேகத்தைப் பலவழியிலும் தீர்த்துக் கொள்ளும் வகையில் அவன் மனம் உழன்றது. இப்படிச் சில நாட்கள் கழிந்தன.

அன்று விடுமுறை தினமாதலால், வழக்கம் போல் கடைவீதிக்குப் போய்விட்டு ஐந்து மணிக்கு வீடு திரும்பிய லலிதா, தன் வீட்டினுள்ளிருந்து வந்த மாலதியின் குரலைக் கேட்டு மிக்க உற்சாகத்துடன் உள்ளே வந்தாள்.

"யாரது மாலதியா! எப்போ வந்தே! உன்னை வெகு நேரமாகக் காக்க வைத்து விட்டேனோ!" என்றுகேட்டுக் கொண்டே தான் சுமந்துவந்த சாமான்களை இறக்கி வைத்து விட்டுத் தோழியை நெருங்கினாள்.

"பொய்யும் புரட்டும் பேசும் உன்னைச் சந்திக்கவா நான் வந்தேன்! யாரைப் பார்க்க வந்தேனோ அவர்களைப் பார்த்துவிட்டேன். நான் வருகிறேன்" என்று எழுந்த மாலதியை அதிசயத்துடன் நோக்கினாள் லலிதா.

"என்னடி மாலதி என்னென்னவோ புதிரெல்லாம் போடுகிறாயே! என்றுமில்லாத கோபம் இன்றைக்கென்ன வந்துவிட்டது! அப்படிக் கோபித்துக் கொள்ளும்படியாக நான் என்ன அபராதம் செய்துவிட்டேன்" என்று கேட்டவள் உண்மையாகவே பதறிப் போனாள்.

"உன்னுடைய வாய்மூடித் தனத்தினால் என் வாழ்க்கையையும் கெடுக்க இருந்தாயே. அதுதான் உண்மை அன்புக் கழகோ!" என்று வெடுக்கெனக் கேட்டவள் மேலே பேசப் பிடிக்காதவளாக எழுந்து போகப் புறப்பட்டாள்.

"உன்னை அத்தனை எளிதில் விட்டுவிட மாட்டேன். சொல்வதைப் புரியும்படியாகச் சொல்ல வேண்டும்" என்று வழி மறித்துக் கொண்டாள் லலிதா.

"சொல்ல என்ன இருக்கிறது! அவனை மணக்கப்போகும் பையன் உன் கணவன் என்பதை அவனுக்குச் சொல்ல வேண்டாமா! விஷயம் இத்தனை விபரீதமாகப் போன பிறகும், உன் விளையாட்டுப் புத்தி உன்னை விட்டுப் போகவில்லை" என்று அம்மா கடிந்து கொண்டாள். அப்பொழுது தான் மாலதியின் கோபத்திற்குக் காரணம் தெரிந்தது. அவள் கோபம் அர்த்தமற்றது என்பதை விளக்க நினைத்த லலிதா. "விளையாட்டுப் புத்தியல்ல அம்மா. என் உண்மை அபிப்பிராயமும் அதுவேதான். நான் இனி அவருடன் வாழப் போவதில்லை. அதற்காக அவர் வாழ்வையும் கெடுத்துக் கொள்ள வேண்டுமா! வாழ்வில் இன்பத்தை அனுபவிக்க இருக்கும் அவரைத் தடை செய்ய நமக்கு என்னம்மா உரிமை இருக்கிறது!" என்று பேசிய லலிதா தன் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்த முடியாதபடி திணறினாள்.

"உனக்கு உரிமை இருக்கிறதோ இல்லையோ— எனக்கு உரிமை இருக்கிறது, உங்கள் இருவரையும் சேர்த்து வைக்க. அதனால் அவருக்குத் தந்தி கொடுத்து விட்டேன் வரச் சொல்லி" என்று மாலதி கூறியதைக் கேட்டுத் திடுக்கிட்டாள் லலிதா.

*   *   *

"லலிதாவுக்கு ஆபத்து உடனே புறப்பட்டு வரவும்" என்ற தந்தியைக் கண்டு பரபரப்பு அடைந்தான் ரகு. என்னதான் வியாதிக்காரி என்று ஒதுக்கி வைத்தாலும் பாசம் அவனை ரயிலேற்றி அனுப்பி வைத்தது. நிலைமை எப்படியிருக்குமோ என்ற பீதியுடன் வீட்டையடைந்த போது வாசலிலேயே நின்ற லலிதாவைக் கண்டு தூக்கி வாரிப்போட்டு நின்றான் ரகு. பாயும் படுக்கையுமாய் மரணத்தின் தலைவாசலில் போராடி விற்கும் மனைவியை நினைத்துக் கொண்டு வந்தவனுக்குத் திடகாத்திரத்துடன் எதிரே நின்ற லலிதாவைக் கண்டு திகைத்தான்.

"என் கண்களில் தவறு ஒன்றும் இல்லையே! நீ என் லலிதாதானே! உன் உடம்பு எப்பொழுது குணமாயிற்று!" என்று கேட்டுக் கொண்டே வீட்டுப் படியேறினான்.

"வியாதி வந்தால் அல்லவா குணமாகவேண்டும். உடம்பு பலஹீனத்தோடு ஜலதோஷம் இருமல் சேரவே என்னை வியாதிக்காரி ஆக்கிவிட்டீர்கள்."

"அப்படியா! இதை ஏன் முன்பே சொல்லவில்லை. அப்படியானால் டி. பி. ஆஸ்பத்திரியில் சேர்த்திருப்பதாக உன் தந்தை எழுதிய கடிதம்!"

"உங்கள் மன ஆழத்தையும் நெஞ்சின் உறுதியையும் தெரிந்து கொள்வதற்கு எழுதப்பட்ட பொய்க் கடிதம்" என்று கூறியவள் வெறுப்போடு அவனை நோக்கினாள்.

"உன் பரீட்சையில் நான் தோற்றுப்போனேன். என்னை மன்னித்துவிடு லலிதா!" என்று கேட்டுக் கொண்டபோது எதுவுமே பதில் பேசமுடியாத நிலையை அடைந்து விட்டாள் லலிதா.

தன்னை வெறுத்த கணவனுடன் வாழக் கூடாதென்றுதான் அவள் நினைத்தாள். ஆனால் வைராக்கியம் நேரில் அவனைக் கண்டதும், தண்ணீரைக் கண்ட உப்பாகி விட்டது. கடமையினின்றும் தவறிய கணவனை வெறும் கல்லாகக் கருதாமல் தெய்வமாக ஏற்றுக் கொண்டாள். கணவனைத் தெய்வமாக வழிபடும் கண்ணகி வழி வந்தவள் என்பதை நிரூபித்து விட்டாள் லலிதா.

பிறகு கேட்க வேண்டுமா! லலிதா — ரகு வாழ்க்கை புது மணமும், புது அழகும் பெற்ற புது வாழ்வாகவே மலர்ந்தது.



லாரி டிரைவர்:—உங்கள் காரின் மேல் மோதி விட்டதற்குத் தயவு செய்து மன்னித்து விடுங்கள். கோபித்துக் கொள்ளக் கூடாது.

காரின் சொந்தக்காரர்:—நன்றாயிருக்கிறது! உன்னிடம் கோபித்துக் கொள்கிறதா? எதற்காக? நான் உனக்கு நன்றியல்லவா தெரிவிக்க வேண்டும்? நீ மோதின வேகத்திலே என் கார் ஸ்டார்ட் ஆகி விட்டது!

# நீங்கள் இன்று உங்கள் பற்களை மக்ளீன் செய்தீர்களா?




ஆமாம். அவள் தனது பற்பசையை நன்கு தேர்ந்தெடுத்திருக்கிறாள் என்பதை நீங்கள் காணலாம். அவள் புன்னகையின் மூலம் தனது பளபளப்பான பற்களைக்காட்டிப் பெருமைப்பட்டுக்கொள்கிறாள். மக்ளீன் பெராக்ஸைட் பற்பசை பற்களை வெண்மையாக்குவதுடன் விடவில்லை. ஈறுகளுக்கு வலுவும் ஆரோக்கியமும் அளித்து சுவாசத்தை இனிதாக்குகிறது. இன்றே மக்ளீன் உபயோகிக்கும் பழக்கத்தை ஆரம்பியுங்கள். மக்ளீன் பெராக்ஸைட் பற்பசையை இன்று முதல் தினமும் இருமுறை உபயோகியுங்கள்.

இப்போது பெரிய அளவிலும் சிக்கனமான மாபெரும் அளவிலும் கிடைக்கிறது.




**பற்களை அதிக வெண்மையாக்குகிறது**

வர்த்தக விசாரணைகளுக்கு:
ஜே. எல். மாரிசன், ஸன் அண்ட் ஜோன்ஸ் (இந்தியா) லிமிடெட்,
...ல பெட்டி 6527 பம்பாய், தபால் பெட்டி 387 கல்கத்தா, தபால் பெட்டி 1370 மதரா...

Y-12 TAM.

பாப்பா மலர்

# ஒரு நாள் ராஜா



முஸ்லிம் மதகுரு (கலீபா) வான ஹாரூன் அல்ரஷீத் கீழ்த்திசை நாடுகளை யெல்லாம் ஆண்டுவந்தான். அவன் ஆட்சி காலத்தில் பாரசீகத்தில் மிகப் பணக்காரனான ஒரு வியாபாரியும் அவன் மனைவியும் வசித்து வந்தனர். அவர்களுக்கு அபூ ஹாஸன் என்ற ஒரே மகன் இருந்தான். அந்த வியாபாரி தன் மகனை மிகவும் பிரியமாக வளர்த்து வந்ததுடன் அவனுக்கு எல்லாவிதமான கல்விகளையும் போதிக்க ஏற்பாடு செய்திருந்தான். அபூஹாஸன் மிக அழகு வாய்ந்தவன்; மகா புத்திசாலி. ஆகையால் பார்ப்போர் பிரமிக்கும்படி புத்திமானாகவும், வசீகரமுள்ள தோற்றமுடையவனாகவும் இருந்தான்.

அபூஹாஸனின் தந்தை அவனுக்கு உலக இன்பங்களில் ஈடுபடச் சந்தர்ப்பமளிக்காமல் கட்டுப்பாடாக வளர்த்து வந்தான். அதனால் மற்ற சிறுவர்கள் மாதிரி அவன் கட்டுக்கடங்காமல் வாழவே இல்லை. ஆகையால் அவன் தந்தை இறந்தவுடன் அவன் விட்டுப்போன சொத்துக்களை உலக இன்பங்களை அனுபவிப்பதில் செலவிடத் தீர்மானித்தான். இப்படித் தீர்மானித்தவுடன் அவன் ஒரு புத்திசாலித்தனமான ஏற்பாடு செய்தான். அவன் தந்தை வைத்துவிட்டுப் போன சொத்துக்களை இரு பகுதிகளாகப் பிரித்தான். ஒரு பாதி சொத்தைக் கொண்டு வீடுகளும் நிலங்களும் வாங்கினான். இவைகளில் கிடைக்கும் வருமானத்தைக் கொண்டு தன் ஆயுள் காலம் பூராவும் சுகமாக வாழ வழி செய்து கொண்டான். மற்ற பாதி சொத்துக்களை இதுவரையில் தான் அனுபவித்து அறியாத சுகங்களை அனுபவிப்பதென்று திட்டம் செய்தான்.

இப்படி ஏற்பாடு செய்து விட்டு அவன் சும்மா யிருக்கவில்லை. ஊரிலுள்ள இளைஞர்களை யெல்லாம் அழைத்துத் தன்னுடன் குஷியாகக் காலங் கழிக்க ஏற்பாடு செய்தான். பணம் தாராளமாகப் புழங்குமிடத்தில் மனிதர் கூடுவதற்குக் கேட்க வேண்டுமா? ஹாஸனின் கைக் காசு கரைவதற்கான உதவி புரிய பல இளைஞர்கள் அவனை வட்டமிட்டனர். அவனைப் புகழ்ந்து, பாராட்டி, அவன் தலை கால் தெரியாமல் பணத்தைச் செலவுசெய்யப் புதிய நண்பர்கள் உதவி செய்தனர். தினம் தினம் சுவையான விருந்துகள்; விருந்து முடிந்ததும் ஆடல், பாடல் போன்ற கேளிக்கைகள்; இவ்வாறாகப் பணம் தண்ணீர்போலச் செலவாயிற்று. இப்படிப் பணம் செலவழித்தால் ஹாஸனின் கதி என்ன ஆகும் என்று அவனுடைய நண்பர்கள் எள்ளளவும் கவலைப் படவில்லை. தங்களுக்கு எவ்வித கஷ்டமுமின்றி ஹாஸனின் செலவில் இயன்ற அளவு சுக வாழ்வு வாழ வேண்டும் என்பதுதான் அவர்களுடைய ஒரே கருத்து.

இந்த இன்பம் சிலகாலம் ஹாஸனுக்கு அளவில்லாத சந்தோஷத்தையளித்தது. ஆனால் பெட்டியிலுள்ள பணம் குறையக் குறைய அவனுக்கு ஓரளவு கவலை ஏற்பட்டது. கவலை தோன்றியவுடன் கணக்குப் பார்க்க ஆரம்பித்தான். வரவு செலவு பார்த்தவுடன் இனிச் செலவு செய்யப் பணம் இல்லை என்பதை அறிந்தான். உடனே தன் நண்பர்களை

அழைத்து இனி முன்போல் பணம் செலவு செய்ய முடியாது என்று அறிவித்தான். இந்த நிலையில் நண்பர்கள் தனக்கு ஆறுதல் கூறுவார்கள் என ஹாஸன் எதிர் பார்த்தான். ஆனால் அவ்வாறு நடக்கவில்லை. உண்மை நிலை அறிந்தவுடன் அவனுடைய நண்பர்கள் ஒவ்வொருவராக நழுவ ஆரம்பித்தனர்.

ஹாஸனுக்குத் தன் பணம் கரைந்து போனது பற்றிக்கூட அவ்வளவாகக் கவலையில்லை. நண்பர்களின் அற்பத்தனம்தான் அவனை மிகவும் வருத்தியது. கஷ்டம் நிறைந்த காலத்தில் மகன் தாயைத் தவிர யாரிடம் முறையிட்டால் ஆறுதல் கூறுவார்கள்? தனது நண்பர்கள் செய்த துரோகத்தையும், அதனால் தனது சொத்தில் பாதி தொலைந்ததையும் தாயிடம் கூறி ஹாஸன் வருந்தினான். மகனுடைய கஷ்டங்களைக் கேட்டு வருந்திய தாய் தன் மகனிடம் துக்கத்தைக் காட்டவில்லை; அவன் செய்த தவறுக்காக அவனைக் குறை கூறவும் இல்லை. அவனுக்கு ஆறுதல் கூறினாள்:

“அப்பா மகனே! இதற்காக வருந்தாதே. உலகமே இப்படித்தான், காசிருந்தால் ஈக்கள் போல் மனிதர்கள் மொய்ப்பார்கள். காசு கரைந்தால் நண்பர்கள் மறைந்துவிடுவார்கள். நீதான் புத்திசாலித்தனமாகப் பாதி சொத்தை வீடுகள் நிலங்களில் போட்டு வைத்திருக்கிறாயே! அதில் வரும் வருமானத்தைக் கொண்டு நாம் சௌகரியமாக இருக்கலாம். இனியாவது நண்பர்கள் விஷயத்தில் ஜாக்கிரதையாயிரு.”

தாயின் நல்வார்த்தையைக் கேட்டு ஹாஸன் ஆறுதலடைந்தான். இனி. தன் பாக்கி சொத்துக்களை வைத்துக் கொண்டு ஒழுங்காக வாழ்க்கை நடத்தத் தீர்மானித்தான். எனினும் தனது நண்பர்கள் இவ்வளவு கெட்டவர்களா என்று பரீட்சை செய்து பார்க்க விரும்பினான். ஒவ்வொரு நண்பரிடமும் தனித் தனியாகச் சென்று, தான் மிகவும் கஷ்ட நிலையிலிருப்பதாகவும், பழைய நேசத்தை உத்தேசித்துத் தனக்கு உதவி செய்ய வேண்டுமெனவும் கேட்பதாக உத்தேசித்தான். அப்பொழுதாவது அவர்களில் யாராவது மனம் கசிந்து உதவி புரிகிறார்களா என்று சோதிக்க எண்ணினான். இந்தத் திட்டப்படி அடுத்த நாள் காலையில் ஒவ்வொரு நண்பர் வீட்டிற்கும் சென்றான். தான் மிகவும் கஷ்ட தசையிலிருப்பதாகவும், அவர்கள் உதவி செய்தால் சீக்கிரத்தில் அவர்கள் கொடுக்கும் பணத்தைத் திருப்பிக் கொடுப்பதாகவும் கேட்டான். ஆனால் ஒருவராவது இவன் வேண்டுகோளுக்குச் செவி சாய்க்கவில்லை. இது மட்டுமல்ல; ஹாஸனின் பழைய நண்பர்களில் சிலர் அவனை இதற்குமுன் பார்த்ததேயில்லை போல நடித்தனர்.

இந்த நண்பர்களின் நன்றி கெட்ட செயல் ஹாஸனுக்கு மிகுந்த ஆத்திரத்தை அளித்தது. இனி பாக்தாத் இளைஞர்களுடன் எவ்வித உறவும் கொண்டாடுவதில்லை என்று சங்கல்பம் செய்து கொண்டு, எக்காரணத்தைக் கொண்டும் அவர்களில் யாரையும் தன் வீட்டிற்கு அழைப்பதில்லை என்று உறுதி செய்து கொண்டான்.

இவ்வாறு தன் காரியமுண்டு தானுண்டு என்று சில காலம் அமைதியாக வாழ்க்கை நடத்தி வந்தான். ஆனால் உல்லாஸமாகக் காலம் கழித்தவர்களுக்கு நண்பர்களின்றி வாழ்வது சற்று கஷ்டம்தான். ஹாஸனும் எப்படியாவது ஓரளவு உற்சாகமாக வாழ வழி தேடினான். மிகுந்த யோசனைக்குப் பிறகு ஒரு முடிவுக்கு வந்தான். தினம் மாலை நகரின் எல்லைக்குச் சென்று நிற்பதென்றும், நகருக்குள் நுழையும் முதல் அன்னியனைத் தன் வீட்டிற்கு அழைப்பதென்றும், இரவு விருந்துண்டவுடன் விருந்தாளியுடன் உல்லாசமாகப் பேசிப் பொழுது போக்குவதென்றும், காலையில் விருந்தாளியைத் தான் பார்க்காமல் தன் வேலையாட்களைக் கொண்டு வழியனுப்புவதென்றும் திட்டம் செய்து கொண்டான். இவ்வாறு சில நாட்கள் கவலையின்றிக் கழிந்தன. கடைசியில் இந்த ஏற்பாடு ஹாஸனை ஒரு விசித்திர அனுபவத்திற்காளாக்கியது.

* * *

ஒருநாள் வழக்கம் போல் ஹாஸன் நகரின் எல்லையில் அன்னிய விருந்தாளிக்காகக் காத்துக் கொண்டிருந்தான். அந்தச் சமயம் ஒரு பணம் படைத்த மதிப்பு வாய்ந்த வியாபாரி நகருக்குள் நுழைந்தான். அவனை ஹாஸன் வணங்கி வரவேற்றுத் தன் வீட்டில் இரவு தங்கி விருந்துண்ணும்படி அழைத்தான். இந்த அன்னியன் முஸ்லிம் மதகுருவாகிய ஹாரூன் அலர்ஷித் தான். மாறுவேஷம் பூண்டு தன் ஆட்சியைப் பற்றி ஜனங்கள் என்ன நினைக்கிறார்கள் என்பதை அறிந்து கொள்வதற்காக அவன் இம்மாதிரி நகர சோதனை செய்வதுண்டு. இம்மாதிரி சுற்றி வருகையில்தான் ஹாஸன் வியாபாரி வேஷத்திலிருந்த கலீபாவைச் சந்தித்துத் தன் வீட்டுக்கு அழைத்தான். ஹாஸனின் புன்னகை தவழும் முகமும், இனிய பேச்சும் வியாபாரி வேஷத்திலிருந்த கலீபாவைப் பெரிதும் கவர்ந்து விட்டன. ஆகையால் அவன் ஹாஸன் வீட்டிற்குச் சென்றான்.

மகா ஜோதியுள்ள கலீபாவை உபசரிக்கப் போகிறோம் என்கிறதை அறியாமலே ஹாஸன் வியாபாரியையும் அவனுடன் வந்த வேலைக்காரனையும் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றான். ஹாஸனின் தாயாருக்கும் தன் மகன் அழைத்து வந்திருக்கும் விருந்தாளி யார் என்று தெரியாதாகையால், சுவையுடன் தயாரிக்கப் பட்ட, ஆனால் சாமான்யமான சாப்பாட்டைப் பரிமாறினாள். உணவை அருந்தியவுடன் ஹாஸன் மெழுகு வர்த்தி விளக்கேற்றி, பழங்களும் திராட்சாரஸமும் கலீபாவுக்கு வழங்கினான். விருந்து முடிந்தவுடன் ஹாஸன் கலீபாவுக்குப் பல தமாஷான கதைகள் சொல்லி மகிழ்வித்தான். (தொடரும்)

# போய் வாருங்கள்!

ஆபீஸ் வேலை முடிந்து வீட்டுக்கு வந்தால் சிலர் கடற்கரைக்குப் போய்க் காற்று வாங்குவார்கள். சிலர் 'பார்க்கு' என்று சொல்லப்படும் இடத்துக்குப் போய் ரேடியோவில் வரும் டப்பா சங்கீதம் சிரவணம் பண்ணுவார்கள். சிலர் சினிமாவுக்குப் போய்ச் சிந்தையைப் பேதலித்துக் கொள்வார்கள்.

ஆனால் நம் மகாலிங்கய்யர் அப்படியெல்லாம் செய்பவர் அல்ல. ஆபீஸை விட்டு வீட்டுக்கு வந்ததும், கோட்டையும் சட்டையையும் கழற்றிப் போட்டுவிட்டு, உடம்பு கை கால் எல்லாம் அலம்பிக் கொண்டு ஒரு 'கப்' காப்பி சாப்பிட்டு விட்டுத் தெருவில் வந்து நின்றுவிடுவார். அவ்வளவுதான், தெருவில் வருகிறவர் போகிறவர்களையெல்லாம் குசலப் பிரச்னம் பண்ண ஆரம்பித்து விடுவார். அலக்ஷ்யமாக இரண்டு மணி நேரம் ஓடி விடும். இதுதான் அவருடைய 'ரிக்ரியேஷன்'.

இந்த முறைப்படியே அன்று அவர், தம் வீட்டு வாசலில் வந்து நின்று கொண்டார். இரவு மணி ஏழு இருக்கும்.

அப்போதுதான் ஸ்ரீமான் சுதர்சனம் அய்யங்கார் ஆபீஸிலிருந்து வந்து கொண்டிருந்தார். "என்ன ஸார், இப்போதுதான் ஆபீஸிலிருந்து வருகிறீர்களா? ஏன் இத்தனை நாழிகை?" என்று கேட்டார் மகாலிங்கய்யர்.

"அது ஏன் கேட்கிறீர்கள்? ஆபீஸில் வேலை ஜாஸ்தி. நாளுக்கு இருபத்து நாலு மணி நேரம் இருந்தாலும் போதவில்லை! அது சரி, நீங்க என்ன லீவில் இருக்கிறீர்களா? நாளை மறுநாள் உம் பெண் கல்யாணமாச்சே. லீவ் எடுத்துத்தானே ஆகணும்"

"லீவாவது ஒன்றாவது. இன்றைக்கு ஆபீஸ் போயிருந்தேன். நாளைக்குக் கூடப் போகப் போகிறேன்......" என்றார் மகாலிங்கய்யர்.

"என்ன! நாளை மறுநாள் கல்யாணம் வைத்துக் கொண்டு, நாளைக்கு ஆபீஸுக்குப் போய் வரத்தான் போகிறேன் என்கிறீரே! என்ன ஐயா! வேடிக்கையாக இருக்கிறதே நீங்கள் சொல்வது?"

"கல்யாணம் இருந்தால் என்ன? யார் வந்தாலும் யார் போனாலும் நம்ம ஆபீஸில் நமக்கு லீவ் கிடையாது. என் பெண் கல்யாணம் என்ன? எனக்கே கல்யாணம் என்று சொன்னால் கூட எங்கள் மானேஜர் எனக்கு லீவ் தரமாட்டார்......"

"பின்னே கல்யாண ஏற்பாடுகள் எல்லாம் எப்படிச் செய்திருக்கிறீர், என்ன? எங்களுக்கெல்லாம் கல்யாணச் சாப்பாடு போடுவதாக உத்தேசம் உண்டா, இல்லையா? அதை இப்போதே சொல்லிவிடும்."

"ச்சு...ச்சு...சாப்பாடு இல்லாமே என்ன ஐயா? பேஷாக உண்டு. நீங்கள் எல்லாம் பெரியவாளா இருந்தல்லவா கல்யாணத்தை நடத்தி வைக்கவேணும்!"

"பெண்ணைப் பெற்ற நீர் என்னவோ ஜனக மகாராஜாவாட்டம் சிம்மதியாக இருக்கிறீர்? கேட்டால், ஆபீஸுக்குப் போகிறேன் என்கிறீர். என்னய்யா, ஒரே மூடு மந்திரமாக இருக்கிறது நீர் பேசுவது? ஏற்பாடுகள் எல்லாம் எப்படி ஒன்றும் சொல்ல மாட்டேன் என்கிறீரே......"

"அப்படிக் கேளும்! கல்யாணம் நடத்துவதற்குச் சத்திரம் எங்கே இருக்கு சாவடி எங்கே இருக்கு என்று தேடிக் கொண்டு போகவில்லை. வீட்டுக் காரர்களே இடம் கொடுப்பதாகச் சொல்லி விட்டார்கள். அதாவது அவர்கள் இருக்கும் இடத்தைக் காலி பண்ணிக் கொடுப்பதாகச் சொல்லி விட்டார்கள். அடுத்த வீட்டு அருணாசலய்யர், மாப்பிள்ளை வீட்டுக் காரர் இறங்குவதற்கு இரண்டு ரூம் காலி பண்ணிக் கொடுப்பதாகச் சொல்லி விட்டார். பந்தல்காரன், பாலசாமிச் செட்டியிடம் அட்வான்ஸ் கொடுத்தாச்சு. நாளைக் காலை பந்தல் போட்டுக் கொடுத்துவிடப் போகிறான். சமையலுக்கு எனக்கு ரொம்ப நாள் பழக்கமுள்ள சுந்தரம் வந்து இருபது ரூபாய் அட்வான்ஸ் வாங்கிக் கொண்டு சாமான் லிஸ்ட் கொடுத்துவிட்டுப் போய்விட்டான். அந்த சாமான் லிஸ்ட்டை என்னோடு ஒண்டுக் குடித்தனம் இருக்கும் சங்கரனிடம் கொடுத்து, பணமும் கொடுத்து விட்டேன். சாமான் கொண்டு வந்து கொடுக்க வேண்டிய பாடு அவன்பாடு. காய் கறிக்கு லிஸ்ட் போட்டு நான் வழக்கமாகக் காய்கறி வாங்கும் வடிவாம்பாளிடம் கொடுத்து விட்டேன். அவள் வீட்டண்டை கொண்டு வந்து கொடுப்பதாக ஒப்புக் கொண்டு விட்டாள். புஷ்பத்துக்கு, கோவிலண்டை வழக்கமாக நான் சுவாமிக்குப் பூ வாங்கும் பண்டாரத்தினிடம் ஏற்பாடு பண்ணிவிட்டேன். மேளத்துக்கு, கல்யாணம் பண்ணி வைக்கிற வாத்தியார், நல்ல மேளக்காரனை அழைத்துக் கொண்டு வரவேண்டிய பொறுப்பு ஏற்றுக் கொண்டு விட்டார். மின்சார விளக்கு ஜோடனைகளுக்கு நம்ம வீட்டிலேயே ஒரு பக்கம் கடை வைத்திருக்கும் அப்பாதுரை ஏற்றுக் கொண்டு விட்டான்..." இப்படி வாய் மூடாமல் அடுக்கிக் கொண்டே போனார் மகாலிங்கய்யர்.

"ஓய்! கிறுத்தும், கிறுத்தும். இப்படி ஒவ்வொரு காரியத்துக்கு ஒவ்வொரு மனுஷ்யன் இருக்கான்னென்றால், இன்றைக்கென்ன, நாளைக்கென்ன, முகூர்த்தத்தன்று கூட நீர் பேஷாக ஆபீஸ் போகலாம், நன்றாகப் போய் வாரும்! இங்கே உட்கார்ந்து நீர் பண்ணுவதற்கு என்ன இருக்கிறது? வருகிறவா போகிறவாளுக்குத் தேங்காய்த் தாம்பூலம் கொடுக்கும் பொறுப்பை நான் ஏற்றுக் கொண்டு விடுகிறேன். அன்றைக்கு வேண்டுமானால் நான் ஆபீஸுக்கு லீவ் போட்டு விடுகிறேன்" என்றார் ஸ்ரீமான் சுதர்சனம். — எஸ். வி. எஸ்.

# திட்டக்குடித் திருநாள்

—பகீரதன்—

ஏழைப் பிராமணர் ஒருவர் தம் ஒரே மகளை நல்ல இடத்தில் திருமணம் செய்து கொடுப்பதற்காகப் பெரும் பாடுபட்டார். கடைசியில் ஒரு போலீஸ் உத்தியோகஸ்தருக்குத் தம் பெண்ணைக் கொடுத்தார். அந்தப் புண்ணியவான் "வரதட்சணைப் பணத்தில் பாக்கியுள்ள ரூபாய் இரண்டாயிரத்தையும் அனுப்பி வைத்தால்தான் தங்கள் பெண்ணை வைத்துக் கொள்ள முடியும். இல்லாவிட்டால் தங்கள் பெண்ணைத் தங்கள் வீட்டுக்கே அனுப்பி வைத்து விடுவேன்" என்று மாமனாருக்குக் கடிதம் எழுதிவிட்டார்.

பெண்ணைப் பெற்ற பிராமணர் பெண்ணின் மீதுள்ள பேரன்பு காரணமாகத் தாம் வேலை செய்த இடத்தில் இருந்து இரண்டாயிரம் ரூபாய் தயார் செய்து அனுப்பிவைத்தார். பணத்தைப் பெற்றுக் கொண்ட போலீஸ் உத்தியோகஸ்தர் மிகவும் சந்தோஷப் பட்டார். ஆனால் இரண்டாயிரம் ரூபாயை மோசம் செய்த குற்றத்துக்காகத் தம் மாமனாரையே கைது செய்யும் துர்ப்பாக்கியம் அவருக்கு ஏற்பட்டு விட்டது. தம் மகளின் நல் வாழ்வுக்காகத் தம்முடைய அருமையான கௌரவத்தையே தியாகம் செய்தார் அந்த உத்தம ஏழைப் பிராமணர்.

ஒரு பெண்ணைப் பெற்றவருக்கே இம்மாதிரியான கஷ்டங்கள் ஏற்படுவதை நாம் பார்க்கிறோம். ஆனால் நானூற்றொரு பெண்களை எந்த விதமான குறைவும் இல்லாமல் ஒருவர் கல்யாணம் செய்து கொடுத்தார். இந்த மகத்தான காரியம் தென்னாற்காடு ஜில்லாவில் நடந்தது. இந்த அற்புதத்தைச் செய்தவர் சாக்ஷாத் வசிஷ்ட முனிவர். இந்தச் சம்பவம் நடந்து எத்தனையோ நூற்றாண்டுகள் ஆனாலும் நேற்று நடந்ததுபோல் தென்னாற்காடு ஜில்லா வாசிகள் பெருமையோடு சொல்லிக் கொள்கிறார்கள்.

வசிஷ்டரின் ஞாபகார்த்தமாக அவர் வசித்து வந்த ஊருக்கு 'வதிட்டக் குடி' என்று பெயர் சூட்டினார்கள். காலக்கிரமத்தில் 'வ' என்ற எழுத்து மறைந்து 'திட்டக் குடி' ஆயிற்று. விருத்தாசலத்தில் இருந்து தென்மேற்கே சுமார் பதினெட்டு மைல் தூரத்தில் உள்ள இந்தத் திட்டக்குடியில் சென்ற மாதம் 30உ அன்று தென்னாற்காடு ஜில்லா மக்கள் திரண்டு வந்து ஸ்ரீ வ. உ. சிதம்பரனாரின் திருநாளைக் கொண்டாடினார்கள்.

* * *

திட்டக்குடி போர்டுஹைஸ்கூல் சார்பில் நடைபெற்ற வ. உ. சி. விழாவில் கலந்து கொள்ள வந்தவர்களை திட்டக்குடி மக்கள் வரவேற்ற வைபவம் பிரமாதமாயிருந்தது. அதை வர்ணிப்பதற்கு ஒரு வசிட்டர்தான் வரவேண்டும்.

திட்டக்குடி கிராமத்து எல்லையிலேயே தேசபக்தர் ஸ்ரீ எஸ். கருப்பையா, போர்டு ஹைஸ்கூல் தலைமை உபாத்தியாயர் ஸ்ரீ ராமமூர்த்தி ஐயர் இருவர் தலைமையிலும் ஆயிரக்கணக்கான உழைப்பாளி மக்கள் புடை சூழ நின்று பூர்ண கும்ப மரியாதையுடன் விழாத் தலைவர் ஸ்ரீ கல்கி ஆசிரியர் அவர்களுக்கு மலர் மாலை சூட்டி உற்சாகத்துடன் வரவேற்றனர். இந்த உற்சாகமும் மரியாதையும் விழா முடிந்து ஸ்ரீ கல்கி ஆசிரியர் திரும்பவும் ஊருக்கு வரும் வரையில் அவர்களிடம் நிலைத்து இருந்ததைக் குறிப்பிட வேண்டும்.

பிறகு ஸ்ரீ டி. கே. பெரியசாமிப் பிள்ளை சகோதரர்களின் இனிமையான நாதஸ்வர முழக்கத்துடன் திரளான மக்கள் குதூகலத்துடன் சூழ்ந்து வர விழாத் தலைவரைத் திட்டக்குடி வீதி வழியே ஊர்வலமாக அழைத்துச் சென்றனர். வழியெல்லாம் தோரணங்கள் கட்டி அலங்காரம் செய்திருந்தனர். ஆங்காங்கு "வருக, வருக!" என்று எழுதிய வரவேற்பு வளைவுகள் ஊர்வலத்துக்கு அழகு செய்து கொண்டிருந்தன.

விழாத் தலைவர் கல்கி ஆசிரியரும் மற்றவர்களும் போர்டு ஹைஸ்கூல் மைதானத்துக்கு வந்த போது 'பட பட பட' வென்று முந்நூற்றொரு குண்டுகள் போட்டு மரியாதை செய்தனர். இப்படிக் கோடை இடிகள் முழங்கியது போன்ற குண்டு மரியாதை முடிந்தவுடன் எல்லாரும் காதைக் குடைந்து கொண்டு அண்ணாந்து பார்த்தனர். பார்த்தவர்கள் பார்த்தபடியே வியந்து கொண்டிருந்தனர். வானத்தில் வாண வேடிக்கைகள் நடத்தி மரியாதை செய்து மகிழும் காட்சியைத்தான் எல்லாரும் கழுத்து வலிக்கப் பார்த்து மகிழ்ந்தோம். இந்தமாதிரி பிரமிக்க வைக்கும் காரியங்களை வசிட்ட முனிவர் ஞாபகார்த்தமாக விளங்கும் திட்டக்குடி மக்களைத் தவிர வேறு யாரால் செய்ய முடியும்!

போர்டு ஹைஸ்கூல் மைதானத்தில் அலங்கரித்த முத்துப் பந்தலில் சிறுமி கமலா கடவுள் வணக்கம் பாட ஸ்ரீ கல்கி ஆசிரியர் அவர்கள் தலைமை வகிக்க வ. உ. சி.த் திருவிழா ஆரம்பமாயிற்று. தலைமை ஆசிரியர் ஸ்ரீ எஸ். ராமமூர்த்தி ஐயர் அவர்கள் விழாவுக்கு வந்திருந்த விருந்தினர்களுக்கும் விழாத் தலைவருக்கும் மாலைகள் சூட்டி வரவேற்றார்.

தேசபக்தர் ஸ்ரீ எஸ். கருப்பையா திட்டக்குடி மக்களைத் தட்டி எழுப்பிய உற்சாகி. தேசத்துக்காகப் பல முறை சிறை சென்ற தொண்டர். திட்டக்குடியின் பொதுக் காரியங்களில் எல்லாம் ஈடுபட்டு பாடுபட்டு வருபவர். அவர் திட்டக்குடி உயர்தர ஆரம்ப பாடசாலையை ஹைஸ்கூலாக மாற்றுவதில் ஏற்பட்ட கஷ்டங்களை எல்லாம் எடுத்துச் சொன்னார். விரைவில் இந்த ஹைஸ்கூல் கல்லூரியாக மாறும் என்று உணர்ச்சி துள்ளச் சொல்லிக் கனவு கண்டார். பத்தாயிரம் பேர் கூட இல்லாத சின்னஞ் சிறு கிராமத்தில் மைதானம் கொள்ளாமல் கூடி அங்கிருந்த வீட்டின்மேல் எல்லாம் ஏறி நின்று கொண்டிருந்த மாபெரும் கூட்டத்தைப் பார்த்துக் கூட்டம் போதவில்லையே என்று ஏங்கினார். விழாத் தலைவரைப் பார்த்து அடக்கமாக ஆனால் மிகுந்த உணர்ச்சியோடு வ. உ. சி.த் திருவிழாவுக்குத் தலைமை வகிக்க வேண்டிக் கொண்டு பூரித்துப் போனார்.

* * *

தென்னாற்காடு ஜில்லா பல விஷயங்களில் பெருமை பெற்ற ஜில்லா. வள்ளல் ராமலிங்க சுவாமிகளின் சிறப்பையும், பழுப்பு நிலக்கரிச் சுரங்கமும், இயற்கையாகவே பொங்கி வழியும் ஊற்று நீர்க் கிணறுகளையும் உடைய ஜில்லா. பழுவேட்டரையர்களின் பரம்பரையாரையும், வல்

நியத்தேவன் வம்சத்தாரையும் கொண்ட உழைப்பாளர்கள் வாழும் ஜில்லா. மண்ணைப் பொன்னாக்கிப் பாலைவனத்தைச் சோலைவனமாக்கி மக்களுக்கு உணவு அளிப்பதையே குலத் தொழிலாகக் கொண்ட வன்னிய குல மக்கள் அதிகம் நிறைந்த ஜில்லா. அரசியல் கோஷ்டிகளும், போட்டிகளும், சிக்கல்களும் மற்ற ஜில்லாக்களைப் போலவே இங்கும் உண்டு. இருந்தாலும் சுதந்திரப் போர் நடந்த காலத்தில் பெரும் பங்கு எடுத்துக் கொண்டு தியாகம் செய்த ஜில்லா. இந்த ஜில்லாவில் உள்ள வன்னியகுல மக்கள் பெரும்பாலும் உழைப்பாளிகள். ஆகவே சென்ற ஜில்லா போர்டு தேர்தலின்போது 'உழைப்பாளர் கட்சி' என்று ஒரு கட்சியை ஆரம்பித்துக் கொண்டு தேர்தலில் பல ஸ்தானங்களைக் கைப்பற்றினர். ஆனாலும் ஜில்லா போர்டு தலைவரான ஸ்ரீ டி. ஆர். சீனிவாச படையாட்சி சிறந்த தேச பக்தர். காங்கிரஸ்காரர். காந்தி மகானிடம் பக்தி கொண்டவர். சட்டசபைத் தேர்தலின் போது, அவர் மட்டும் உழைப்பாளர் கட்சியில் இருந்திருந்தால் போட்டியின்றியே தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பார். உழைப்பாளர் கட்சியில் அவரைச் சேர்க்கப் பல முயற்சிகள் நடந்தன. அடிக்கடி கட்சி மாறி, பதவி பிடிக்கும் ஆசையில்லாத ஸ்ரீ சீனிவாச படையாட்சி காங்கிரஸ் கட்சியின் சார்பிலேயே தேர்தலில் நின்றார். மிகக் குறைந்த வோட்டு வித்தியாசத்தில்தான் தோற்றுப் போனார் "தோல்வியில் கலங்கேல்" என்ற பாரதியின் மணி வாக்குக்கு இணங்க இப்பொழுதும் விடாது தொண்டாற்றி வருகிறார். அவருடைய நிலையான கொள்கையாலேயே அவரிடம் தென்னாற்காடு ஜில்லாவின் மக்களுக்கு மதிப்பும் மரியாதையும் அதிகமாகி யிருக்கிறது. தென்னாற்காடு ஜில்லாவின் எல்லாக் கட்சிக்காரர்களும் பாராட்டும்படி ஜில்லா போர்டு நிர்வாகத்தை மிகத் திறமையாக நடத்திவருகிறார் அவருடைய முயற்சியால்தான் திட்டக்குடியில் சென்ற ஆண்டு போர்டு ஹைஸ்கூல் ஆரம்பமாயிற்று. பள்ளிக்கூடத்தை மேலும் விஸ்தரிப்பதற்காக முயன்றார். ஸ்ரீ ஆறுமுக முதலியார், ஸ்ரீ துரைசாமிப் பிள்ளை போன்ற பெரியோர்கள் வழங்கிய பொருளுதவியைக் கொண்டு பள்ளிக்கூடத்தை யொட்டி எளிய முறையில் புதிதாக ஒரு கட்டிடம் கட்டி முடித்திருக்கிறார்.

இந்தப் புதிய கட்டிடத்துக்குப் பள்ளிக்கூட நிர்வாகிகள் ஜில்லா போர்டு தலைவரின் ஞாபகார்த்தமாக "சீனிவாச ஹால்" என்று பெயர் சூட்டி இதைக் கட்டி முடிக்க உழைத்த விருத்தாசலம் ஹைவேஸ் இன்ஜினியர் ஸ்ரீ சுப்பிரமணிய செட்டியாரைக் கொண்டு திறந்து வைத்தார்கள்.

அத்துடன் திருப்தி அடையாமல் ஸ்ரீ சீனிவாசப் படையாட்சியின் உருவப் படத்தைப் பெரிய அளவில் தயார் செய்து பின்னலூர் ஸ்ரீ ஜீ. வாகீசம் பிள்ளை, எம். எல். ஏ. அவர்களைக் கொண்டு திறந்து வைத்தனர். இந்தக் காட்சிகளைப் பார்க்கும்போது திட்டக்குடி பள்ளிக்கூட நிர்வாகிகளின் நன்றி உணர்ச்சியை எண்ணி வியந்து மனத்துக்குள் பாராட்டிக் கொண்டேன்.

திட்டக்குடி போர்டு உயர்தரப் பாடசாலையில் சுமார் முப்பது ஆண்டுகள் தொடர்ச்சியாகத் தலைமை ஆசிரியராகத் தொண்டாற்றி 190 மாணவர்களையும் 7 ஆசிரியர்களையும் கொண்ட சின்னஞ் சிறு பாடசாலையை 1500 மாணவர்களும் 40 ஆசிரியர்களும் உள்ள மிகப் பெரிய ஆரம்ப பாடசாலையாக மாற்றிச் சென்னை மாகாணத்திலேயே சிறந்ததாக உயர்த்தியவர் ஸ்ரீ வி. பூவராகமூர்த்தி ராவ் அவர்கள். அவரிடம் எழுத்தறிவு பெற்ற எண்ணற்ற மாணவர்கள் இன்று நாடெங்கும் நல்ல நிலைமையில் வாழ்ந்து வருகின்றனர். அப்படி ஆயிரக்கணக்கான மாணவர்களுக்கு எழுத்தறிவு ஊட்டிய ஸ்ரீ பூவராகமூர்த்தி ராவ் அவர்களின் திரு உருவப் படத்தை விருத்தாசலம் வக்கீல் ஸ்ரீ நாராயணசாமிப் பிள்ளை திறந்து வைத்தார். ஸ்ரீ பூவராகமூர்த்தி ராவ் அவர்களின் சிறந்த குணங்களையும் அவர் இந்தப் பள்ளிக்கூடத்துக்கு ஆற்றிவரும் தொண்டைப் பற்றியும் அவருடைய பழைய மாணவரும் பிர்க்கா காங்கிரஸ் கமிட்டி காரியதரிசியுமான ஸ்ரீ எம். எம். பாவாடைராயன் எடுத்துச் சொன்னார்.

மேலக்குப்பம் ஆசிரியர் ஸ்ரீ வெங்கட்ரமணாச்சாரியார் ஆங்கிலமும் தமிழும் கலந்த மணிப் பிரவாளத் தமிழில் ஒரு ஹாஸ்யச் சொற்பொழிவை நிகழ்த்தி எல்லாரையும் குதூகலப்படுத்தினார்.

மதுரை டிவிஷனல் கல்வி இலாகா இன்ஸ்பெக்டர் ஸ்ரீ சி. ராஜநாதன் நம் முதல் மந்திரி ராஜாஜி அவர்களின் திருவுருவப் படத்தைத் திறந்து வைத்துப் பெருமைப் பட்டார். அவருடைய தியாக வாழ்க்கையை மக்களுக்கு எடுத்துச் சொல்லி விளக்கினார். ஜில்லா கல்வி அதிகாரி ஸ்ரீ டி. ஆர். தினதயாளன் "மாணவர் கடமை"யைப் பற்றி ரத்தினச் சுருக்கமாக நல்ல தமிழில் பேசினார்.

விழாத் தலைவர் ஸ்ரீ கல்கி ஆசிரியர் அவர்கள் பலத்த கரகோஷங்களுக் கிடையே எழுந்திருந்து 'கப்பல் ஓட்டிய தமிழன்' என்று சிறப்புப் பெயர் தாங்கிய ஸ்ரீ வ. உ. சிதம்பரம் பிள்ளையின் திரு உருவப் படத்தைத் திறந்து வைத்து அருமையான சொற்பொழிவு ஆற்றினார். "தஞ்சை, சென்னை முதலிய இடங்களில் பொதுக் கூட்டங்களில் பார்த்தால் வெள்ளை வெளேரென்று ஆடை தரித்துக் கொண்டு சபா அலங்காரமாகப் பிரசங்கம் கேட்பதற்கு வந்திருப்பார்கள். இங்கு நீங்களோ இடையில் ஒரு வேஷ்டியும் தோளில் ஒரு துண்டும் அணிந்து திறந்த மேனியுடன் வந்திருக்கிறீர்கள். உங்களைப் பார்க்கும்போதே தென்னாற்காடு ஜில்லா உழைப்பாளிகள் நிறைந்தது என்பது நன்றாகத் தெரிகிறது. உங்கள் முன்னிலையில் உழைப்பாளிகளின் தலைவர் ஸ்ரீ வ. உ. சி. யின் படத்தைத் திறந்து வைப்பதில் வேறு துறையில் உழைக்கும் உழைப்பாளியான நான் பெருமைப் படுகிறேன்" என்று உழைப்பாளிகளோடு உழைப்பாளியாய் ஒன்றிப் பேசினார். உழைப்பின் பெருமையையும் அதன் அவசியத்தையும் அவர்களுக்கு விளங்கும்படி எடுத்துக் கூறினார். அந்தக் கூட்டத்தாரை யெல்லாம் ஸ்ரீ வ. உ. சிதம்பரனார் வாழ்ந்த காலத்துக்கே அழைத்துச் சென்று சிதம்பரனார் சிறையில் செக்கு இழுத்து உழைத்த காட்சியைக் காண்பித்தார். மக்கள் வ. உ. சி. செக்கிழுத்ததையும், கல் உடைத்ததையும், கசை அடிபட்டதையும் பார்த்துப் பரிதபித்தனர். அடுத்த கணம் அவருடைய அஞ்சா நெஞ்சத்தையும், தளராத உழைப்பையும் பார்த்துப் பிரமித்து ஊக்கம் பெற்று நிமிர்ந்து உட்கார்ந்தனர்.

"உழைப்பாளி கட்சி என்று பெயர் மட்டும் வைத்துக் கொண்டு உழைக்காமல் இருப்பதில் பயன் இல்லை. உண்மையான உழைப்பாளிகள் காங்கிரஸ் கட்சியில்தான் இருக்கின்றனர். உங்கள் ஜில்லா போர்டு தலைவர் ஸ்ரீ சீனிவாச படையாட்சியையே எடுத்துக் கொள்ளுங்களேன். தோல்வியைக் கண்டு கலங்காமல் அவர் உழைத்து வரவில்லையா! உண்மையான உழைப்பு ஒரு நாளைக்கு

வெற்றி பெற்றே தீரும். இன்றைய தோல்வி நாளைக்கு வெற்றியாக மாறலாம். தென்னாற்காடு ஜில்லா உழைப்பாளிகள் உண்மையான உழைப்பாளர்கள் நிறைந்த காங்கிரஸில் ஒரு நாளைக்குச் சேரத்தான் போகிறார்கள்" என்று கல்கி ஆசிரியர் கூறிய போது அதை ஆமோதித்து வரவேற்பது போல அந்தச் சபையில் கரகோஷம் எழுந்தது.

வட இந்தியாவில் இருக்கும் உலகப் புகழ் சாந்திநிகேதனப் பள்ளிக்கூடத்துடன் திட்டக்குடி போர்டு ஹைஸ்கூலை ஒப்பிட்டு ஆசிரியர் கல்கி அவர்கள் சொன்னார். "கட்டிடம் கட்டப் பணம் இல்லையே என்று ஏங்காமல், உள்ள பணத்தை வைத்துக் கொண்டு, கீற்று வேய்ந்த அருமையான கொட்டகைகள் போட்டுக் கட்டிடம் கட்டி இருப்பதைப் பார்க்கும் போது எனக்குச் சாந்தி நிகேதனத்தின் நினைவுதான் வருகிறது. இப்படி கட்டிடத்துக்குப் பணத்தை விரயமாக்காமல் கீற்றுக் கொட்டகைகளிலே பள்ளிக்கூடங்களை நடத்தலாம் என்றுதான் நம் தலைவர் ராஜாஜி அவர்களும் சொல்லுகிறார்கள்" என்று சொல்லும்போது மேற்படி பள்ளிக்கூட நிர்வாகிகள் மலர்ந்த முகத்தையும் திட்டக்குடி மக்களின் நிமிர்ந்த தோளையும் பார்த்து மகிழ்ந்தேன். "தேசபக்தர் ஸ்ரீ கருப்பையாவைப் போல் கிராமத்துக்கு ஒருவர் இருந்தால் தேசத்தில் உள்ள கல்வியின்மை சூரியனைக் கண்ட பனி போல் நீங்கிவிடும்" என்று ஸ்ரீ கல்கி ஆசிரியர் கூறியபோது சபையோருடன் ஸ்ரீ கருப்பையாவும் கைதட்டி மகிழ்ந்தார். எதிர் காலத்தில் இந்தத் திட்டக்குடி போர்டு ஹைஸ்கூல் மிகப் பெரிய கல்லூரியாகி இதிலிருந்து செல்லும் மாணவர்கள் உலகமெங்கும் புகழ் பெற்று விளங்கப் பிரார்த்தித்தார்.

மக்கள் மனம் வைத்தால் ஆகாதது ஒன்றுமில்லை. பண வசதியும் தாராள மனப்பான்மையும் படைத்த தென்னாற்காடு ஜில்லா மக்களே! திட்டக்குடி போர்டு ஹைஸ்கூலை மறந்து விடாதீர்கள். அதற்குத் தாராளமாகப் பண உதவி அளித்து உழைப்பாளி மக்களுக்கு உதவி புரியுங்கள். எழுத்தறிவுக்குக் கொடுக்கும் தருமம், தருமங்களுக் கெல்லாம் தலை சிறந்தது.

கடைசியாகத் தேசிய கீதத்துடன் குண்டு முழக்கத்துடன் வாண வேடிக்கையுடன் வ. உ. சி. த் திருவிழா கோலாகலமாக நடந்து முடிந்தது.

இந்த வ. உ. சி. த். திருநாளை இவ்வளவு சிறப்பாகக் கொண்டாடுவதற்கு உழைத்த தலைமை ஆசிரியர் ஸ்ரீ எஸ் ராமமூர்த்தி ஐயர், தேச பக்தர் ஸ்ரீ எஸ். கருப்பையா முதலானவர்களுடன் ஸ்ரீ பூவராகமூர்த்தி ராவ், ஸ்ரீ திருவேங்கடாச்சாரி, ஸ்ரீ ஆர். வைத்தியநாதசாமி, ஸ்ரீ எஸ். சாமிநாதன், ஸ்ரீ சுந்தரராஜ ஐயங்கார், ஸ்ரீ ராமமூர்த்தி முதலியவர்களும் பாடுபட்டார்கள் என்று அறிகிறேன். அவர்களுடைய ஊக்கத்தையும் உணர்ச்சியையும் குதூகலத்தையும் பாராட்டுகிறேன்.

வாழ்க வ. உ. சி! வாழ்க திட்டக்குடி போர்டு ஹைஸ்கூல்! வாழ்க உழைப்பாளிகள்!

## சண்முக சுந்தரம் - சஞ்சீவிபாய் திருமணம்



தமிழ் எழுத்துக்களை அழகிய முறையில் அச்சு வார்த்துத் தமிழ் அன்னைக்கு அரும்பணியாற்றி வரும் சுதேசிடைப் பவுண்டரியின் சொந்தக்காரர் ஸ்ரீ டி. ஏ. சுப்ரமணிய முதலியாரின் புதல்வர் ஸ்ரீ டி. எஸ். சண்முக சுந்தரம் அவர்களுக்கும் ஸ்ரீ சி. லக்ஷ்மி நரசிம்ம முதலியார் (பர்மாஷெல் ஏஜண்ட், வேலூர்) அவர்களின் குமாரி சி. எல். சஞ்சீவிபாய்க்கும் சென்ற 5-ந் தேதி சென்னை ராயப்பேட்டையில் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. திருமணத்தின் போது நண்பர்களும், பிரமுகர்களும், உறவினர்களும் திரளாக வந்திருந்து மணமக்களை ஆசீர்வதித்தனர். மணமக்களுக்கு ஏராளமான வாழ்த்துப்பாக்களும் பத்திரங்களும் படித்துக் கொடுக்கப்பட்டன. தமிழ் நாட்டின் பல பாகங்களிலிருந்து வாழ்த்துத் தந்திகளும், பரிசுகளும் வந்தன.

அன்று மாலை நடந்த தேநீர் விருந்துக்கும், ஸ்ரீமதி எம். எல். வசந்த குமாரியின் இன்னிசை விருந்துக்கும், மறு நாள் நடந்த மறு வீட்டு வைபவத்துக்கும் அதையொட்டி நிகழ்ந்த ஸ்ரீ ஜி. என். பாலசுப்ரமணியம் கச்சேரிக்கும் சென்னை நகரப் பிரமுகர்கள், பத்திரிகையாளர்கள் எல்லாரும் சேர வந்திருந்து சிறப்பித்தனர். வாழ்க மணமக்கள்! வாழ்க பல்லாண்டு!


ஒவ்வொரு வேலைக்கும் பிரத்யேகமான
ஷாலிமார் பெயிண்ட்
இருக்கிறது
புத்திசாலிகள் ஷாலிமார் பெயிண்டையே
உபயோகிக்கிறார்கள்.
SHALIMAR
PAINT
SHALIMAR PAINT, COLOUR & VARNISH CO., LTD.
POST BOX 136, MADRAS 1
Importers & Distributors for Ceylon:
LEWIS BROWN & CO., LTD., POST BOX 85, COLOMBO




## 4. கோர விபத்து!

வள்ளிக்கு அந்தக் காரை ஓட்டிச் சென்ற வாலிபரை நன்கு தெரியும். அவள் பட்டக்காரர் வீட்டில் வேலைக்கு இருந்த போது அவரோடு நன்கு பழகி இருக்கிறாள். ஆனால் நாடோடிகளின் கூட்டத்தில் சேர்ந்து உருவிலும், உடையிலும் மாறி இருக்கும் வள்ளியை அவர் அடையாளம் கண்டு கொள்வதென்பது கடினம்தான். அந்த வாலிபர்தான் பட்டக்காரரின் ஒரே மகன். அவர் பெயர் குமாரலிங்கம். வள்ளி ஒன்றையும் மறந்து விடவில்லை. நெடு நாட்களுக்கு முன் அவரைப் பார்த்திருந்தாலும் அவர் முகம் அப்படியே இருப்பதை வள்ளி கண்டு கொண்டாள்.

'ஆமாம், அவர்களுக்குக் குழந்தையைக் கவனித்துக் கொள்ள ஒரு தாதிப் பெண் வேண்டியிருக்காதா! கட்டாயம் வேண்டியிருக்கும். ஏன் நான் அவர்களிடம் போய் எனக்கு அந்த வேலையைக் கொடுக்கும்படி கேட்கக்கூடாது!' என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள் வள்ளி. ஆனால் அடுத்த விநாடியில் அவள் சித்தம் மாறியது. தன் சொந்தக் குழந்தையைக் கூடத் தொட்டு அணைக்கப் பாக்யமில்லாத துரதிர்ஷ்டம் பிடித்த கையால் சீரும் சிறப்புமாகச் செல்வத்தில் வளரும் சீமான் வீட்டுக் குழந்தையைத் தொட எனக்கு யோக்யதையே இல்லை. என்னால் அந்தக் குழந்தைக்கும் ஏதாவது துரதிர்ஷ்டம் ஏற்பட்டால்...! ஆகவே, அவள் முதலில் செய்த தீர்மானம் முற்றிலும் தவறானது என்று முடிவு கட்டினாள்.

கார் சென்ற திசையில் ஏற்பட்ட புழுதிப் படலம் அடங்கிவிட்டது. அவள் தன் மனத்தைப் பலவிதமான குழப்பத்திற்குள்ளாக்கிக் கொண்டு பித்துப் பிடித்தவள் போல் அந்தப் பாதையில் நடந்தாள். திடீரென்று அந்தப் பாதையில் ஒரு திருப்பம். தன் நினைவற்று வந்து கொண்டிருந்த அவள் கண்களில் முன்பு பார்த்த அதே கார் நின்று கொண்டிருப்பது பட்டது. அதைக் கண்டதும் திகைப் பூண்டை மிதித்தவள் போல் நின்றுவிட்டாள். அவள் திகைப்படையும் வண்ணம்தான் இருந்தது. அப்பொழுது அந்தக் கார் இருந்த நிலைமை! அந்த வண்டி அந்தப் பாதையில் முறிந்து விழுந்து கிடக்கும் பெரிய மரக் கிளை ஒன்றில் வேகமாக வந்து மோதியதால் சிதறிச் சின்னா பின்னமாயிருந்தது. அந்தக் காரை ஓட்டிக் கொண்டு வந்த வாலிபர் ரஸ்தாவில் ஒரு புறம் விழுந்து கிடந்தார். அவருடைய அழகான மனைவி அவருக்குச் சிறிது தூரத்தில் விழுந்து கிடந்தாள். அவளுக்குப் பக்கத்தில் அவளுடைய குழந்தை விழுந்து கையையும் காலையும் உதறிக் கொண்டு கிடந்தது. அமைதி தோய்ந்த அந்தக் கோரக் காட்சியைக் கண்டதும் வள்ளி சிலைபோல் தூரத்திலேயே நின்று விட்டாள். மரத்தில் மோதியதால் சீர் குலைந்து கிடக்கும் அந்தக் காரைப் பார்த்து விட்டு அங்கு விழுந்து கிடக்கும் இளம் தம்பதிகளையும் பார்த்தாள். அவர்களைப் பார்த்தவுடனேயே அவளுக்கு அடி வயிற்றில் பகீரென்றது. பரிதாபம்! சிறிது நேரத்திற்கு முன்னால் ஆனந்தமாகக் காரில் சவாரி செய்யும் எந்த இளம் தம்பதிகளைப் பார்த்தாளோ, அவர்களையே இப்பொழுது பிணக் கோலத்தில் கண்டாள்......! இது உண்மைதானா அல்லது ஜோடித்து வைத்த காட்சியா......! அவள் கண்களையே அவளால் நம்ப முடியவில்லை. கண்ணிற்கினிய படங்களை வரைந்து காட்டும் ஆற்றல் வாய்ந்த சித்திரக்காரன் பைத்தியம் பிடித்துப் போய்க் கற்பனைக்கும் எட்டாத ஒரு பயங்கரக் காட்சியை வரைந்து காட்டினால் எப்படியிருக்குமோ, அப்படி இருந்தது, அவள் கண்ட அந்தக் காட்சி! பணக்காரர்களாய் இருந்தாலென்ன! துரதிர்ஷ்டமும் சோதனையும் அவர்களையும் துரத்திக் கொண்டுதான் வருகிறது என்பதை அவள் அப்பொழுதுதான் உணர்ந்தாள்.

உயிரற்ற தாய்க்குப் பக்கத்தில் கிடந்து கையையும் காலையும் உதறிக் கொண்டிருந்த குழந்தை இப்பொழுது அழத் தொடங்கியது. பாவம்! அதற்கு அப்பொழுதுதான் அங்கு எத்தகைய காரியம் நடந்திருக்கிறது என்பது பற்றிய உணர்வு வந்தது போலிருக்கிறது. அப்பொழுதுதான் சற்றுத் தூரத்தில் மரம்போல் நின்று கொண்டிருந்த வள்ளிக்கும் சுய உணர்வு வந்தது. அவள் பாய்ந்தோடிச் சென்று அந்தக் குழந்தையைத் தன் கைகளால் வாரி எடுத்து அணைத்துக் கொண்டாள். அழகு குலைந்து அலங்கோலமாகக் கிடக்கும் அந்தக் குழந்தையின் தாயைக் கவனித்து பார்த்தாள். அவள் இறந்து விட்டாள் என்று வள்ளிக்கு நிச்சயமாய் விளங்கியது. தன் வாழ்க்கையைப் பாதுகாத்துக் கொள்ள அதிர்ஷ்டவசமாக நம்மை இன்னொரு கை வந்து எடுத்து அணைத்துக் கொண்டு விட்டது என்பதை அறிந்து கொண்டது போல் அந்தக் குழந்தை தன் அழுகையை நிறுத்திக் கொண்டு வள்ளியின் முகத்தைப் பார்த்தது. வள்ளி திகைப்போடும் பயத்தோடும் அந்த வாலிபர் விழுந்து கிடக்கும் இடத்தை நெருங்கி அவருடைய முகத்தைப் பார்த்தாள். படுகாயமடைந்திருக்கும் அந்த முகத்தைப் பார்க்கவே அவ



னுக்குப் பயமாயிருந்தது. அவள் பளிச்சென்று அந்த இடத்தை விட்டுப் பின்வாங்கினாள். தன் தகப்பனுக்கும் தாய்க்கும் நேர்ந்த கதியை அந்தக் குழந்தையின் விஷயறியாக் கண்களில் படாத வண்ணம் பார்த்துக் கொள்ள நினைத்தாள். அந்தக் குழந்தையைத் தன் மார்போடு அணைத்துக் கொண்டு தன் புடவைத் தலைப்பினால் அதை மூடிக் கொண்டாள். 'ஹூம்! சில குழந்தைகளோடு பிறக்கும்போதே துரதிர்ஷ்டமும் பிறந்துவிடுகிறது!' என்று தனக்குள் சொல்லிக்கொண்டே அந்தக் குழந்தையோடு சமீபத்திலிருந்த மரத்து நிழலில் ஒதுங்கி நின்றாள்.

அந்தக் குழந்தையை அணைத்த வண்ணம் அவள் அங்கு நிற்கும்போது அதனால் தனக்கு ஏதேனும் ஆபத்து ஏற்படுமோ என்று அஞ்சினாள். அந்த உணர்ச்சி அவள் உடலெங்கும் பரவி அவளைப் பீதியடையச் செய்தது. ஆனால் சிறிது நேரத்தில் அவள் மனத்தில் சிறிது தைரியம் எழுந்தது. அவள் விழிகளில் ஒரு பிரகாசம் ஏற்பட்டது. அவள் ஒரு பெருமூச்சு விட்டாள். அவள் தலை குனிந்து தன் உடலோடு உடலாக ஒட்டிக் கொண்டிருக்கும் அந்தக் குழந்தையின் அழகான முகத்தைப் பார்த்தாள். 'சற்று நேரத்திற்கு முன்னால் என்ன நடந்தது! இப்பொழுது நாம் எங்கே, யாரிடம், எந்த நிலையிலிருக்கிறோம்!' என்பதை யெல்லாம் பற்றிச் சிறிதும் கவலைப்படாமல் அந்தக் குழந்தை வள்ளியின் அணைப்பில் அமைதியாகத் தூங்கிக் கொண்டிருந்தது. பட்டுப் போன்ற இமைகளை மூடிக் கொண்டு அந்தக் குழந்தை தூங்கும் அழகைப் போல் எந்த அழகையும் வள்ளி தன் ஆயுளில் கண்டதே இல்லை. அவள் மனத்தில் வளர்ந்திருந்த தாய்க்கு உரிய அன்பு, ஆர்வமெல்லாம் அந்தக் குழந்தைக்கே உரித்தானதாயிற்று. அவள் மெதுவாக அந்தக் குழந்தையை முகத்தோடு முகமாகப் பதிய வைத்துக் கொண்டு, "என் கண்ணே!" என்றாள். அந்தக் குழந்தையை மிகவும் பத்திரமாக வளர்க்க வேண்டுமென்று தனக்குள் திடப்படுத்திக் கொண்டாள். 'அந்தக் குழந்தையைத் தானே வைத்துக் கொண்டு வளர்ப்பதாய் இருந்தால் அதற்கு ஏற்படக்கூடிய கஷ்டத்தையும் துயரத்தையும் ஏற்றுத்தானே ஆக வேண்டும்!' என்று அவள் மனம் குமுறியது.

அந்தக் குழந்தையை நாடோடிகளின் ராணியாக்கிவிடலாம். ஆனால் எங்கோ காணாமற் போன தன்னுடைய குழந்தையும் அகப்பட்டுவிட்டால்...! ஆனால் இந்தக் குழந்தை! இது அவளுடைய குழந்தை இல்லையென்று நிரூபிக்க யார் இருக்கிறார்கள்! இந்த ரகசியத்தைக் கண்டுபிடிக்க வேண்டுமென்ற சிரத்தை யாருக்கு விழப் போகிறது! வள்ளி கையில் குழந்தையுடன் யோசித்த வண்ணம் அந்த மரத்தடியில் நிற்கும் போது அந்த விபத்து நடந்த இடத்தை நோக்கி இரண்டு மூன்று மனிதர்கள் வந்தார்கள்.

மோட்டார் விபத்து ஏற்பட்ட இடத்தில் சிறிது சிறிதாக ஜனக் கூட்டம் சேரலாயிற்று. அவர்கள் மரத்தில் மோதி நசுங்கி நாசமாகிக் கிடக்கும் காரையும் படுகாயமடைந்து ரஸ்தாவில் கிடக்கும் தம்பதிகளையும் பார்த்து ஒருவருக்கொருவர் வியப்போடு பேசிக் கொண்டிருந்தார்களே தவிரச் சமீபத்தில் மரத்தடியில் குழந்தையை அணைத்த வண்ணம் நிற்கும் வள்ளியைக் கவனிக்கவேயில்லை.

வள்ளி அவர்கள் திருஷ்டியில் படாமலிருப்பதற்காக இன்னும் சற்றுத் தூரத்திலிருக்கும் வாய்க்

கால் மதகுக்குச் சமீபமாகப் போய் நின்று கொண்டாள். சிறிது தூரத்தில் நின்று வேடிக்கை பார்க்க வேண்டுமென்ற எண்ணம் அவளுக்குத் தோன்றியதே தவிர அப்பொழுதே அந்த இடத்தை விட்டுக் குழந்தையுடன் ஓடிவிட வேண்டுமென்ற எண்ணம் தோன்றவில்லை.

"கொஞ்ச நேரத்திற்கு முன்னால்தான் இந்தக் கார் கிழக்கே இருந்து ரொம்ப வேகமாக வந்ததை நான் பார்த்தேன். இந்த ஆசாமி அவ்வளவு கண்மூடித்தனமாக வந்ததால்தான் இப்படிப்பட்ட ஆபத்து ஏற்பட்டது!" என்றார் ஒரு மனிதர்.

"ஆமாம். நான்கூடத்தான் பார்த்தேன். சிலருக்குக் காரில் ஏறி உட்கார்ந்து ஓட்டத் தொடங்கிவிட்டால் தலைகால் தெரிவதே இல்லை. அவர்கள் விதியெல்லாம் ஒரு நாள் இப்படித்தான் முடியும். இப்படி எதன்மீதாவது மோதி உயிரை விட்ட பிறகுதான் உண்மையை உணருவார்கள்" என்றார் மற்றொருவர்.

அவர்கள் இப்படித் தலைக்குத் தலை ஏதேதோ பேசிக் கொண்டிருந்தார்களே தவிர வாய்க்கால் மதிலுக்குச் சமீபமாக நிற்கும் வள்ளியைக் கவனிக்கவில்லை. அவர்கள் அவளைப்போல் எத்தனையோ நாடோடிப் பெண்களை அந்த ரஸ்தாவில் கண்டிருக்கிறார்கள். தங்களைப் போல் அவளும் ஒரு வழிப்போக்கு ஆசாமி என்று நினைப்பதைத் தவிர அவளைப் பற்றிக் குறிப்பாக வேறு எதுவும் நினைக்கக் காரணம் என்ன இருக்கிறது! அவர்கள் குழம்பிக் குழம்பிப் பேசிக் கடைசியில் ஒரு முடிவிற்கு வந்தனர். உடனே போலீஸிற்குத் தகவல் கொடுக்க யாராவது போகவேண்டும் என்று தீர்மானித்தார்கள். அவர்களில் சைக்கிள் வைத்திருந்த ஒருவர், தாம் போகும்போது போலீஸ் ஸ்டேஷனில் சொல்லிவிட்டுப்போவதாகச் சொல்லிச் சென்றார்.

சில நிமிடங்களுக்குள் அந்த இடத்தில் கூட்டம் பெருகியது. இரு திசைகளிலுமிருந்து வந்த வண்டிகளும், கார்களும் அப்படி அப்படியே நின்றன. அமைதியாக இருந்த அந்த ரஸ்தாவில் ஜனசந்தடி ஏற்பட்டது. ஒருவருக்கொருவர் பலவிதமாகப் பேசிக் கொண்டும், ஒருவரை ஒருவர் தள்ளி விலக்கிக்கொண்டும் மரத்தில் மோதி நொருங்கிய காரையும், படுகாயமடைந்து கிடக்கும் தம்பதிகளையும் பார்க்கத் துடித்தனர்.

வள்ளி அவர்களுக்குச் சமீபத்தில் நெருங்காமல், தான் நின்ற இடத்தை விட்டு அசையாமல் எல்லாவற்றையும் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தாள். ஆனால் தன் கையிலிருந்த குழந்தையை அவள் பிறர் கண்களுக்குப் படாமல் மறைத்து வைத்துக் கொள்ள வேண்டியிருந்தது. அப்பொழுது அந்தக் குழந்தைக்கு அணிவிக்கப்பட்டிருந்த பட்டுச் சட்டையும் விலையுயர்ந்த நகையும் அவளை ஆபத்தில் சிக்க வைக்கப் போதுமானவை அல்லவா! ஆகவே, அவள் தன் கந்தல் புடவையால் முன்னிலும் அதிகமாக அதை மூடி மறைத்து வைத்துக் கொண்டாள். சில நிமிடங்களில் ஒரு பெரிய காரில் ஐந்தாறு போலீஸ் உத்தியோகஸ்தர்கள் வந்தனர். போலீஸ் உடையணிந்த அவர்களைக் கண்டதும் வள்ளியின் மனத்தில் ஒரு நடுக்கம் ஏற்பட்டது. அவள் தன் கையிலிருந்த குழந்தையைக் கெட்டியாக அணைத்துக் கொண்டாள்.



இனி ஒரு நிமிஷம் கூட அங்கு தாமதிக்கக் கூடாது என்று அவளுக்குப் பட்டது. மறுபடியும் தன்னுடைய கூட்டத்தினரோடு போய்க் கலந்து கொள்வதுதான் சரியான வழியாக அவளுக்குப் பட்டது. ஏனெனில் போலீஸ்காரர்கள் குழந்தையைப் பற்றி அவர்களிடம் வந்து விசாரிக்க மாட்டார்கள் அல்லவா! நாடோடிகளும் அந்தக் குழந்தையை அவளுடையது தானென்று ஏற்றுக் கொண்டு விட்டால் அப்புறம் எவ்விதமான ஆபத்தும் ஏற்பட வழியில்லை. எனவே, உடனே அந்த இடத்தை விட்டு ஒருவர் கண்ணிலும் படாமல் போய்விட வேண்டுமென்று அவள் தீர்மானித்தாள்.

எப்படி அந்த இடத்தை விட்டுத் தப்பிப் போகலாமென்று வள்ளி சுற்றிலும் பார்த்தாள். அந்த வாய்க்கால்க்கரை ஓரமாக ஒரு ஒற்றையடிப் பாதை சென்றது. அதன் வழியாக நடந்தால் அது எங்கே கொண்டு போய் விடுமென்று அவளுக்குத் தெரியாது. ஆனால் அந்தப் பாதை வழியாகத் தப்பிச் செல்வதுதான் அவளுக்கு அப்பொழுது எளிதாகப் பட்டது. அவள் தன்னை யாரேனும் கவனிக்கிறார்களா என்பதை ஓரக் கண்களால் பார்த்துக் கொண்டே அந்த ஒற்றையடிப் பாதை வழியாக அதி வேகமாக நடந்தாள். சிறிது நேரத்திற்குள் அவள் அங்கு நின்ற கூட்டத்தினரின் திருஷ்டியிலிருந்து மறைந்து நெடுந்தூரம் சென்று விட்டாள்.

அவள் மனத்தில் எழுந்த பீதியும் படபடப்பும் அப்பொழுதுதான் சிறிது தணிந்தன.

அந்த வாய்க்கால்க் கரை ஓரமாக அவள் எவ்வளவு தூரம் நடந்திருப்பாளோ! அது அவளை ஒரு பெரிய ரஸ்தாவில் கொண்டு வந்து சேர்த்தது.

அந்த ரஸ்தாவிற்கு வந்தவுடன் அவளுக்கே ஒரு ஆச்சர்யமேற்பட்டது. அவள் முதல் நாள் எந்த ரஸ்தாவில் மயக்கமுற்று விழுந்தாளோ, எந்த இடத்தில் அவள் ஒரு குழந்தையைப் பெற்று அதைப் பறிகொடுத்தாளோ, அதே ரஸ்தாதான் அது. அந்த இடத்திற்கு அவளாகத்தான் நடந்து



அவன் :—நீ இப்போது உன் மனத்தில் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாய்?

அவள் :—ஏதோ பைத்தியக்கார நினைவுதான்!

அவன் :—என்னைப் பற்றி நினைத்துக் கொண்டிருக்கப்படாதோ?

அவள் :—அதைத்தானே செய்து கொண்டிருந்தேன்!

வந்தாளா அல்லது ஏதாவது தேவதைதான் அவளை அங்கு அழைத்துக் கொண்டு வந்து விட்டதா என்று அவளுக்கே புரியவில்லை. அந்த வழியாகத் தானே அவளுடைய கூட்டத்தினர் கும்பகோணத்திற்குப் போனார்கள்! அந்த வழியே நடந்தால் தானும் கும்பகோணத்திற்குப் போய்த் தன் கூட்டத்தினருடன் கலந்துவிடலாமென்ற நம்பிக்கையும் சந்தோஷமும் அவளுக்கு ஏற்பட்டன.

மாலை நேரம் நெருங்கிவிட்டது. இன்னும் சிறிது நேரத்தில் சூரியன் மறைந்து எங்கும் இருள் சூழ்ந்துவிடும். இரவு நேரத்தில் குழந்தையோடு வழி நடப்பது அவளுக்குச் சரியானதாகப் படவில்லை. அவளும் அப்பொழுது மிகவும் களைப்படைந்திருந்தாள். ஆகவே, அவளுக்குச் சிறிது ஓய்வு வேண்டியதாயிருந்தது. இரவு எங்காவது ஒரு பத்திரமான இடத்தில் தங்கிவிட்டுக் காலையில் எழுந்து போவதுதான் நல்லதென்று நினைத்தாள்.

அவளுடைய கவலை முழுவதும் அந்தக் குழந்தையைப் பத்திரமாகப் பாதுகாக்க வேண்டுமே என்பதுதான். அவள் ஒரு மாத்தடியில் நின்று மெதுவாகத் துணியை விலக்கித் தன் கையிலிருந்த குழந்தையைப் பார்த்தாள். அது நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தது. ஆஹா! அந்தக் குழந்தைதான் எவ்வளவு அழகாக இருந்தது! அந்தக் குழந்தையைப் பார்க்கப் பார்க்க அவள் உள்ளத்தில் தாய்மை உணர்ச்சியும் ஆர்வமும் பொங்கின.

அது அவளுக்குப் பிறந்த குழந்தையல்ல. அவளுக்குப் பிறந்த குழந்தை எங்கேயோ மாயமாக மறைந்து விட்டது. ஆனால் தான் இழந்த குழந்தையை மறுபடியும் அடைந்து விட்டது போன்ற ஆனந்தம் அவளுக்கு அப்பொழுது ஏற்பட்டது. அப்படி அவள் நினைத்தபோதிலும் ஒரு புறம் அவள் மனத்தில் சோர்வும் பலவீனமும் இருக்கத்தானிருந்தன. அவளுடைய மனச்சாட்சி உறுத்தியது. எப்படி இருந்தாலும் அது அவள் வயிற்றில் பிறந்த குழந்தையாகுமா! நாளைய தினம் அது விசாரணைக்கு வந்தால் அதைத் தன் குழந்தை என்று சொல்லி வாதாடி வெற்றி அடைய அவளுக்கு என்ன ஆதாரமிருக்கிறது!

"எப்படி இருந்தாலும் என் உயிர் போவதானாலும் பிரிந்தாலும் நான் இந்தக் குழந்தையை ஒருவரிடமும் கொடுக்க மாட்டேன்" என்று தனக்குள் கண்டிப்பாகச் சொல்லிக் கொண்டாள். அவள் அந்தக் குழந்தையுடன் தன் கூட்டத்தினரிடம் சென்றால் மிகவும் குதூகலமாக வரவேற்பார்கள் என்று அவளுக்குத் தெரியும். ஏனென்றால் அவர்கள் அந்தக் குழந்தைக்காக எவ்வளவு ஆர்வத்தோடும் ஆசையோடும் காத்திருக்கிறார்கள்! அவள், தான் பெற்ற குழந்தையை இழந்தபோது வெறுங்கையுடன் அவர்களிடம் செல்லப் பயப்பட்டாள். ஆனால் அந்த அச்சம் இப்பொழுது அவளுக்கு இல்லை. இப்பொழுது அவள் ஒரு குழந்தையோடு போகப் போகிறாள். அவர்கள் நிச்சயம் அவளைச் சந்தோஷத்தோடு அழைத்துக் கொண்டாடுவார்கள். எனவே, அவள் வழியில் எவ்வித ஆபத்தும் ஏற்படாமல் இருக்கும் இடத்தைத் தேடி அடைந்துவிட வேண்டும் என்று நினைத்தாள். எந்தத் திசையை நோக்கி அவர்கள் முன்பு சென்றார்களோ, அதே திசையை நோக்கி நடக்கலானாள்.

அந்தப் பாதையில் மனித சஞ்சாரமே இல்லை. இரு புறமும் வயல் வெளிகளும் வரிசையாக மரங்களும் இருந்தனவே தவிர, இரவு வேளையில் தங்கிச் செல்வதற்குச் சௌகர்யமான இடம் எதுவும் இல்லை. அப்பொழுது அவளுடைய தைரியமும் துணிவும்தான் அவளுக்கு வழித்துணையாக நின்று உதவின.

(தொடரும்)

# ஒவ்வொரு வருடமும் இந்த உபகண்டத்தில் 20 லக்ஷத்திற்கு மேலான ஜனங்கள் மலேரியாவினால் கொல்லப்படுகிறார்கள்

மலேரியாவினால் ஏற்படும் மரணங்களை ஒருபுறமிருக்க இக்கொடிய வியாதி அதனால் பீடிக்கப்படுபவர்களைப் பலஹீனப்படுத்தி இதர வியாதிகள் தாக்குவதற்கு முன்பே கொன்றுவிடுகிறதென்பதைத் தெரிந்துகொண்டால் இந்த பயங்கரமான எண்ணிக்கை மேலும் முக்கியத்துவம் அடைகிறது. மலேரியாவின் பயம் எப்பொழுதும் உங்களைச் சுற்றியிருக்கிறது. ஏனெனில் அது உங்களுடைய சரீரத்தில் தொற்றிக் கொள்வதற்கு ஒரு கொசுக்கடியே போதும். நீங்கள் இந்த அபாயத்தை ஒருபொழுதும் அலட்சியம் செய்யக்கூடாது.

இப்பொழுது 'பாலுட்ரின்' மலேரியாவிலிருந்து உங்களுக்குப் பாதுகாப்பை அளிக்கிறது. ஒரே அணா விலையுள்ள ஒரு மாத்திரையை வாரம் ஒருமுறை உட்கொண்டு வந்தால், அது அந்த நோயை அணுகவிடாது. நீங்களும் உங்களுடைய குடும்பமும் வாரத்திற்கு, ஒருவருக்கு மிகக் குறைவான ஒரே அணா செலவில் மலேரியாவிலிருந்து உங்களைப் பாதுகாத்துக் கொள்ளலாம். அளவு முறைகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

**அபாயத்தின் சின்னங்களைக் கவனியுங்கள்:**

முதலில் குளிரால் நடுக்கம் உண்டாகும். ஜுரம் ஆரம்பமாகும். இதனால் உடம்பு முழுவதும் வியர்க்கும். தேகம் முழுவதும் வலி உண்டாகும். இந்த அறிகுறிகளை ஒருபொழுதும் அலட்சியம் செய்யாதீர்கள்—உடனேயே டாக்டரின் ஆலோசனையைக் கேளுங்கள். மலேரியா கண்டிருந்தால், 'பாலுட்ரின்' எப்படி உங்களுடைய ஜுரத்தை சில நாட்களில் நீக்குகிறது என்பதையும் எதிர்காலத்தில் மலேரியா உங்களை அணுகாமல் எப்படி பாதுகாப்பை அளிக்கிறது என்பதையும் அவர் சொல்லுவார்.

நம்பிக்கைக்குகந்த 'பாலுட்ரின்' மாத்திரைகள் சுத்தமானவை. தெளிவாகத் தெரியும் காகித உறைகளில் சுற்றப்பட்டு வருகின்றன. ஒரு மாத்திரை விலை ஒரே அணா தான்.



# 'பாலுட்ரின்'

**மலேரியாவை வீழ்த்துகிறது**

## அளவுமுறை



சிகிச்சைக்கு: வயதானவர்களுக்கும் 12 வயதுக்கு மேற்பட்டவர்களுக்கும் ஒரு மாத்திரை. 6லிருந்து 12 வயது வரையுள்ள குழந்தைகளுக்கு அரை மாத்திரை. 6 வயதிற்கு கீழ்ப்பட்ட குழந்தைகளுக்கு கால் மாத்திரை வீதம் தினந்தோறும் ஜுரம் குணமடையும் வரை கொடுக்கவும்.

பாதுகாப்பிற்கு: மேலே குறிக்கப்பட்ட அளவுகளை அனுசரிக்கவும். ஆனால் வாரம் ஒருமுறை அதே தினத்தில் சாப்பிட வேண்டியது.

எப்பொழுதும் 'பாலுட்ரின்' சாப்பாட்டிற்குப் பிறகு அதிக அளவு தண்ணீருடனோ அல்லது பாலுடனோ உட்கொள்ள வேண்டும் என்பதை ஞாபகத்தில் வைத்திருங்கள்.

இம்பீரியல் கெமிக்கல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) லிமிடெட்.

ICP 75

# பெண் பார்த்த படலம்

## ஸி. வி. எஸ். ஆறுமுகம்

“வா, அப்பா கோபு! ரசமான சமாசாரம் ஒன்று இருக்கிறது!” என்று அறைக்குள் வந்த கோபுவை வரவேற்றான் ராமு.

“என்னப்பா, ரசமான சமாசாரம்!” என்று கேட்டுக் கொண்டே கோபு சட்டையைக் கழற்றி ஆணியில் மாட்டிவிட்டு ராமுவின் எதிரில் வந்து உட்கார்ந்தான்.

“நீ பனையூருக்குப் போயிருக்கிறாயாடா, கோபு? கடையநல்லூர் ஸ்டேஷனில் இறங்கி வடக்கே மூன்று மைல் மாட்டு வண்டியில் போக வேண்டும். அங்கே சாமிநாதத் தேவர் என்று ஒரு மிராசுதார் இருக்கிறார். அவர் வீட்டில் உனக்கு நாலு வேளை மாப்பிள்ளைச் சாப்பாடு. அங்கே போய் வர உனக்கு ஆகும் செலவை நான் ஏற்றுக் கொள்கிறேன். என்ன, போய் வருகிறாயா!” என்றான் ராமு.

கோபுவுக்கு ஒன்றும் புரியவில்லை. ஆகவே, “விஷயத்தை விளங்கச் சொல் அப்பா, பனையூர் மிராசுதார் வீட்டுக்கு எதற்காக நான் போக வேண்டும்!” என்று கேட்டான்.

ராமு ஒன்றும் பேசாமல் மேஜையிலிருந்த ஒரு கடிதத்தை எடுத்துக் கோபுவிடம் கொடுத்தான்.

கோபுவும் ராமுவும் பிராண சிநேகிதர்கள். இருவருக்கும் ஒரே ஆபீஸில் வேலை. இருவரும் கல்யாணமாகாத இளைஞர்கள். ஓட்டலில் சாப்பிட்டுக்கொண்டு மாடியிலிருந்த ஒரே அறையில் வசித்து வந்தார்கள்.

கோபு கடிதத்தை வாசித்தான்.

“சிரஞ்சீவி ராமுவுக்கு, அப்பா ஆசீர்வதித்து எழுதியது.

இப்பவும் உனக்கு இந்த ஆவணியில் கல்யாணம் செய்து விடுவது என்று நிச்சயித்துப் பனையூர் மிராசு சாமிநாதத் தேவர் வீட்டிலிருந்து உனக்குப் பெண் கொள்ள உத்தேசித்திருக்கிறோம். நீ வருகிற சனிக்கிழமை யன்று புறப்பட்டு அங்கே போய்ப் பெண்ணைப் பார்த்துவிட்டு வந்து உன் சம்மதத்துக்குக் கடிதம் எழுதவும். நீ அங்கு வருவதாக அவர்களுக்கும் கடிதம் எழுதி யிருக்கிறேன்...”

கோபு கடிதத்தை வீசி எறிந்துவிட்டு, “ஓடுடா ஓடு! நாலு கால் பாய்ச்சலில் போய்ப் பெண்ணை பார்த்துவிட்டு ஓடிவா!” என்றான்.

“ஏய், கோபு! நான் கேட்பதற்குப் பதில் சொல்லாமல் நீ என்னவோ பேசுகிறாயேடா! நீ பனையூருக்குப் போய் வருகிறாயா, இல்லையா! முதலில் அதைச் சொல்லுடா!”

“அப்பனே! பெண் எடுக்கப் போவதோ உனக்கு. பெண்ணைப் பார்க்க வேண்டியவனும் நீயே. இதிலே எனக்கு என்ன ஜோலியடா அங்கே!” என்று கேட்டான் கோபு.

“பெண்ணைப் பார்ப்பதாவது, மண்ணாங்கட்டியாவது! பனையூர்க் கிராமத்தில் எப்படிப்பட்ட பெண்ணடா இருப்பாள்! அதை நினைத்தாலே எனக்கு இப்போதைக்குக் கல்யாணம் வேண்டாம் என்று தோன்றுகிறது. இருந்தாலும் அப்பா சொற்படி அங்கே போனதாகவும், பெண்ணைப் பார்த்ததாகவும் பேர்பண்ண வேண்டியிருக்கிறது. இதற்கு உன்னைப் போகச் சொல்வதில் விசேஷம் என்னவென்றால், என்னைத் தெரிந்தவர் அங்கே யாரும் கிடையாது. நீ ‘ஜம்’ என்று மாப்பிள்ளை வேஷம் போட்டுக் கொண்டு போ. நீதான் நான் என்று அவர்கள் நினைத்துப் பலமான விருந்து வைப்பார்கள். அப்புறம் நீ பெண்ணைப் பார்த்ததையும், அவள் நாணிக் கோணிக்கொண்டு வந்ததையும் இங்கே வந்து ‘இமிடேட்’ செய்தால் வேடிக்கையாக இருக்கும்” என்று சொல்லிவிட்டுக் கலகலவென்று சிரித்தான் ராமு.

கோபு சிரிக்கவில்லை. “முடியாதப்பா! ஒருவேளை எப்படியாவது குட்டு வெளிப்பட்டு விட்டால் என் கதி என்ன ஆகும்!” என்று பயந்தான்.

“என்ன ஆகுமடா! இதென்ன கொலைக் கேஸா! அப்படியே வெளிப்பட்டாலும் சமயோசிதமாக ஏதாவது சொல்லிச் சமாளித்துக்கொண்டு விட முடியாதா, என்ன!” என்றான் ராமு.

கோபுவுக்கு முதலில் கொஞ்சம் தயக்கமாக இருந்தாலும், இதிலே அப்படிப் பயப்படுவதற்கு என்ன இருக்கிறது என்று ஒரு தைரியமும் ஏற்பட்டது. அதையும் தவிர ரொம்ப நாள் அவர்கள் பேசிச் சிரிப்பதற்கு ஒரு விஷயம் அகப்படுவதாகத் தோன்றவே, “சரி, போகிறேன்” என்று வேறு சொல்லாமல் ஒப்புக் கொண்டான்.

★

கோபு கடையநல்லூர் ஸ்டேஷனில் இறங்கியபோது ஏகதேசமாக அவன் எதிர்பார்த்தபடி அங்கே அவனை வரவேற்க யாரும் காத்திருக்கவில்லை. அதுவே நல்லதாகப் போயிற்று என்று அவனுக்குத் தோன்றியது. ஸ்டேஷனிலிருந்து ஒரு வண்டியை அமர்த்திக் கொண்டு பனையூர் மிராசுதார் வீட்டை அடைவதில் கோபுவுக்குச் சிரமம் ஏதும் இருக்கவில்லை. கோபு பெட்டி படுக்கைகளுடன் மிராசுதார் வீட்டில் பிரவேசித்த போது உள்ளே யிருந்து வந்த மிராசுதார்



“என் புதுக் காரைப் பார்த்தாயா? எப்படியிருக்கிறது! மலை மேலேகூட லட்சியம் இல்லாமல்...”

“இது என்ன அதிசயம்! உன்னுடைய பழைய கார் ஒரு தடவை ஒரு மரத்தின் மேலேயேகூட ஏறப் பார்க்கவில்லையா?”

"வாருங்கள், வாருங்கள்!" என்று ரொம்பநாள் பழகியவர்போல் அவனை வரவேற்றார்.

அவன் கையிலிருந்த பெட்டியை அவர் வாங்கிக் கொண்டு, "நீங்கள் இங்கு வருவதாக அப்பா எழுதிய கடிதம் இப்போதுதான் கிடைத்தது. நானே ஸ்டேஷனுக்கு வரவேண்டுமென்று புறப் பட்டேன். அதற்குள் நீங்களே வந்து விட்டீர்கள்!" என்று முந்திக்கொண்டு பேசினார்.

கோபுவுக்குத் தனது கபடப் பிரயத்தனம் ஏதும் இல்லாமல் காரியம் சாதகமாக நடப்பதைக் குறித்து உள்ளூற மகிழ்ச்சி தான். அதோடு மிராசுதாரின் சரளமான சுபாவமும், கலகலப்பான பேச்சும் அவனுக்கிருந்த பயத்தை முற்றிலும் போக்கிவிட்டன. எனவே, கோபு தனது பாத்திரத்தை நன்கு உணர்ந்து நடித்தான். இடையிடையே அந்தப் பெண்ணைப் பற்றிய நினைவும் அவனுக்கு இல்லாமலில்லை. 'அவள் எங்கே இருக்கிறாள்! எப்படி இருப்பாள்!' என்பதை அறிய அவ்வப்போது அவன் மனம் அலைந்தது. ஆனால், அங்கே முற்றத்தில் உலரப் போட்டிருந்த ஒரு ஆறு கஜம் முரட்டுக் கண்டாங்கி அவன் மனத்தில் ஒரு பயங்கரமான கற்பனையை எழுப்பிக் கொண்டிருந்தது.

......கரு பெருகு போன்ற மேனி, காதுகளில் பாம்படம், கை நிறையக் குத்திப் பச்சை, கால்களில் விரல் பருமன் வெள்ளித் தண்டை......

கோபுவுக்கு இம்மாதிரியான ஒரு கற்பனைப் பெண்ணைப் பற்றி நினைத்தபோது பரிதாபச் சிரிப்பு வந்தது. அதோடு தன்னிடம் அவ்வளவு பாசத்தையும் அன்பும் காட்டும் அந்தக் குடும்பத்தாரிடம் அனுதாபமும் ஏற்பட்டது.

அன்றையப் பொழுது கழிந்து மறுநாள் வந்தது. கோபு ஊருக்குத் திரும்ப வேண்டிய சமயமும் வந்தது. கோபுவும் மிராசுதாரும் சாப்பிட்டுவிட்டு வந்து கூடத்தில் உட்கார்ந்தார்கள். அப்போதுதான் அந்தப் பெண் அவர்களுக்கு வெற்றிலைத் தட்டு கொண்டுவந்து வைக்கும் சாக்கில் அங்கே அனுப்பப் பட்டாள்.



வெற்றிலைத் தட்டைக் கொண்டுவந்து வைத்து விட்டுப் புள்ளிமான்போல் ஓடிவிட்ட அந்தப் பெண்ணைக் கோபு பார்த்தபோது, அவன் கண்களை அவனாலேயே நம்ப முடியவில்லை.

'இந்தக் குக்கிராமத்தில் இப்படியும் ஒரு பெண்ணா!' என்று அவன் மனம் ஓர் கேள்விக் குறியாக வளைந்து நின்று விட்டது.

"வெற்றிலை போடுங்கள்" என்று மிராசுதார் தட்டை நகர்த்தி வைத்தபோதுதான் கோபுவுக்குச் சுய உணர்வு வந்தது. 'அடடா! இப்பேர்ப்பட்ட பெண் நமக்கு அல்லவே!' என்ற ஏக்கத்தால் அவன் முகம் பரிதாபமாக வாடியது.

கோபு ஊருக்குப் புறப்பட எல்லோரிடமும் விடைபெற்றுக் கொண்டு வாசலில் நின்ற வில் வண்டியில் ஏறியபோது அவன் கண்கள் அவனை அறியாமல் தாமாகவே திரும்பி மிராசுதாரின் வீட்டை ஆவலுடன் பார்த்தன. அங்கே வாசல் ஓரமாக இருந்த தூண்களுக்கப்பால் அவள் நின்று கொண்டிருந்தாள். அந்தக் காட்சி, சட்டம் போட்ட கண்ணாடிப் படத்திலிருக்கும் வன தேவதைமாதிரி யிருந்தது. கோபுவின் பார்வை விழுந்த அதே கணத்தில் அந்தத் தாமரை முகம் மலர்ந்தது. அந்த விசாலமான கண்கள் தம் நயன பாஷையில், "போய் வாருங்கள். நமஸ்காரம்" என்று விடை கொடுத்தன. இதற்குள் வாசலில் நின்ற வண்டி நகர்ந்தது. எதையோ பறிகொடுத்தவன் மாதிரி கோபு ஒரு பெருமூச்சு விட்டான்.

★

பனையூரிலிருந்து திரும்பி வந்த கோபுவிடம், ராமு எதிர்பார்த்த தமாஷ், உற்சாகம், சிரிப்பு ஒன்றுமே காணப்படவில்லை. அவன் அங்கே போய் வந்ததுபற்றி ஏதோ விசனப்படுபவன் மாதிரிக் காணப்பட்டான்.

"அடே! நாம் எதிர்பார்த்தபடி ஒன்றும் இல்லை. அப்படிப்பட்ட அழகியை நான் இதுவரை பார்த்ததில்லை. அவளை மணம் செய்துகொள்ள நீ ஆயிரம் ஆண்டுகள் தவம் இயற்றி யிருக்க வேண்டும்" என்று சுருக்கமாகப் பெண்ணைப் பற்றிய பேச்சை முடித்துக் கொண்டான் கோபு.

அதற்குப் பின் கோபுவின் தூண்டுதலின்பேரில் ராமுவின் கல்யாண ஏற்பாடுகள் வெகு துரிதமாக நடைபெற்றன.

'பெண் பிடித்து விட்டது' என்று தகப்பனுக்கு ராமு ஒரு கடிதம் எழுதினான். பெண் வீட்டாருக்கும் மன்னிப்புக் கேட்கும் தோரணையில், "நான் அப்போது வரமுடியாத அசௌகரியத்தால் பெண் பார்க்க என் நண்பனை அனுப்பி வைத்தேன். அவன் பூரண திருப்தி தெரிவித்து விட்டதால் எனக்குச் சம்மதம்" என்று ஒரு கடிதமும் எழுதிப் போட்டான்.

சில நாட்களுக்கெல்லாம் பனையூர் மிராசுதாரிட மிருந்து ராமுவுக்கு ஒரு கடிதம் வந்தது. அதில் அவர் எழுதி யிருந்தார்:

"......பெண் பார்ப்பது என்ற விஷயத்தில் பெண்ணை மாப்பிள்ளை பார்ப்பது என்று மட்டும் பலர் நினைக்கிறார்கள். அச்சந்தர்ப்பம் பெண் பையனைப் பார்ப்பதற்கும் ஏற்படுத்தப் பட்டது என்பது என் கொள்கை. அது எப்படியானாலும் நீங்கள் நேரில் வந்து பெண்ணைப் பார்த்து விட்டு முடிவு செய்து கொள்ள வேணுமாகக் கேட்டுக் கொள்கிறேன். இவ்விஷயத்தில் நான் பெண்

உலகெங்கும், வெற்றிபெற்ற மனிதர்கள்

# ஜில்லெட்

## உபயோகிக்கிறார்கள்...



எந்த பொருளிலும் சிறந்ததையே வழக்கமாக உபயோகிக்கும் மனிதர்கள் ப்ளூ ஜில்லெட் பிளேடுகளைத்தான் உபயோகிக்கிறார்கள். பணத்தால் இதைவிட சிறந்ததை வாங்க முடியாது. நீடித்த காலம் உழைப்பதும், மிகவும் கூராக தீட்டப்பட்டதுமான ப்ளூ ஜில்லெட் பிளேடுகள் உங்கள் தாடியை சுலபமாக நீக்கி விடுகின்றன. ஆயினும் அதன் விலை மிகவும் சரசமாயிருக்கிறது. அதனால் ஒவ்வொரு மனிதனும் ஒரு தனவந்தனைப்போலவே க்ஷவரம் செய்து கொள்ளலாம்.



# ப்ளூ ஜில்லெட் பிளேடுகள்

6 பிளேடுகளுக்கு 14 அணா

களுக்குப் பூரண சுதந்திரம் கொடுப்பவன். என் மூத்த பெண் விஷயத்தில்கூட...''

பிராகசதாருடைய கொள்கைகள், அவர் தம் மூத்த பெண் விஷயத்தில் நடந்து கொண்ட முறைகள் இவற்றை எல்லாம் ராமுவுக்குத் தெரிந்து கொள்ள விருப்பமில்லை.

பெண்ணைப் பெற்ற ஒரு மனுஷன் இப்படி ஒரு கடிதம் எழுதுவது துடுக்குத்தனம் என்றே பட்டது. அதோடு, எந்தப் பெண்ணும் தன்னைப் பார்த்து அவலட்சணம் என்று சொல்லி விடக்கூடிய அளவுக்குத் தான் அவ்வளவு குரூபி அல்ல என்ற நிச்சயத்தில், ஒரு நாள் கடிதம் எழுதி விட்டுப் பெண் பார்க்கப் பனையூருக்குப் போனான்.



கோபு சொன்ன விவரத்தைக் காட்டிலும் பெண் ஒரு படி மேலாகத் தோன்றவே, அந்த ரூபவதியை மனைவியாக அடைய ஆயிரம் ஆண்டுகள் அல்ல, இரண்டாயிரம் ஆண்டுகள் தவம் செய்திருக்க வேண்டுமென்ற எண்ணத்துடன் ராமு திரும்பி வந்தான்.

பிற்பாடு ஒரு சுபதினத்தில் ராமுவுக்கும், பனையூர் பிராகசதார் புதல்வி சௌ. பத்மாவுக்கும் விவாகம் இனிது நடைபெற்றது. ஆனால் அந்தக் கல்யாணம் இவ்வளவு துரிதமாக நடைபெற ராமுவுக்குத் தூண்டுகோலாக இருந்த கோபு, அந்தக் கல்யாண வைபவத்தில் கலந்து கொள்ளவில்லை. ராமுவின் விவாக தினத்துக்கு நாலு நாள் முந்தி, ஊரில் ஏதோ அவசரக் காரியம் என்று கோபு லீவு எடுத்துக் கொண்டு போய் விட்டான். விவாகம் கழிந்து மனைவியை அழைத்துக் கொண்டு வந்து ராமு தனிக் குடித்தனம் வைத்த பிறகும், பல தடவைகள் கோபுவை விருந்துக்கு அழைத்திருக்கிறான். ஆனால் கோபு ஏதேதோ சாக்குப் போக்குச் சொல்லி மறுத்துக் கொண்டே வந்தான். இப்படி இவன் வேற்று மனிதன்மாதிரி விலகிக் கொண்டிருக்கிறானே என்று ராமு அவனிடம் கோபித்துக் கொண்டு போனதைக்கூட கோபு அவ்வளவாகப் பொருட்படுத்தவில்லை. தான் விளையாட்டுத்தனமாக ஆள் மாறாட்டம் செய்ததின் மூலம் இன்னொருவனுக்கு மனைவியாகப் போகிற பெண்ணின் உள்ளத்தை அநாவசியமாகச் சலனமடையச் செய்துவிட்டோமே என்னும் விஷயத்தில் வெட்கப்பட்டவன்போல, அந்தப் பெண்ணின் முகத்தை மீண்டும் ஒரு தடவை பார்க்கக் கோபு விரும்பவில்லை.

*

சுமார் ஆறு மாதங்களுக்குப் பிறகு ஆபீஸ் அலுவல் காரணமாகக் கோபு பனையூருக்குப் போக வேண்டியிருந்தது.

ராமு உடனே தன் மாமனாருக்கு அவன் வருகையைப் பற்றிக் கடிதம் எழுதி, அவன் அங்கு தங்கும் நாட்களில் வேண்டிய வசதிகள் செய்து கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டான்.

கோபுவை வரவேற்க பிராகசதார் ஸ்டேஷனுக்கே வில்வண்டியுடன் வந்திருந்தார். முன்னை விடப் பன்மடங்கு அன்புடனும் மரியாதையுடனும் கோபுவை உபசரித்தார்கள் பிராகசதாரின் வீட்டார்கள்.

அன்று சாப்பிடும்போது தண்ணீர் கொண்டு வந்து வைத்த பெண்ணைப் பார்த்தபோது கோபுவுக்குத் தூக்கி வாரிப் போட்டது. அது அவளேதான்! இவள் எப்போது இங்கே வந்தாள்! ராமு இவளை இங்கு அனுப்பியிருப்பதாக ஒன்றும் சொல்லவில்லையே!......

கோபுவின் மனக் குழப்பத்தை மேலும் அதிகப்படுத்துவதுபோல் பிராகசதார், ''பத்மாவுக்குச் சுகமில்லை என்று மாப்பிள்ளை எழுதியிருந்தாரே, இப்போது எப்படி இருக்கிறது? நீங்கள் இங்கே வரும்போது அங்கு போயிருந்தீர்களா?'' என்று மிகவும் ஆதுரத்துடன் விசாரித்தார்.

''எனக்கு அதைப்பற்றி ஒன்றும் தெரியாது. எந்தப் பத்மாவைப் பற்றிக் கேட்கிறீர்கள்? இங்கே இருப்பது யார்?'' என்று கோபு தன்னை மறந்து கேட்டது பிராகசதாருக்கு அளவுக்கு மிஞ்சிய ஆச்சரியத்தை அளித்தது.

''உங்கள் நண்பர் ராமுவுக்குக் கொடுத்திருக்கும் பெண்தான் பத்மா. இங்கே இருப்பது எங்கள் மூத்த பெண் கமலா. நமது வழக்கப்படி இவளைத்தான் ராமுவுக்குக் கொடுத்திருக்க வேண்டும். இந்தப் பெண் ஒரேயடியாக தனக்கு இப்போது கல்யாணமே வேண்டாம் என்று சொல்லிவிட்டாள். இந்தமாதிரி விஷயங்களில் எனது கொள்கை என்னவென்றால்......''

கோபுவுக்கு இப்போது பிராகசதாரின் கொள்கைகளை அறிந்து கொள்வதில் ஆவல் ஒன்றும் இருக்கவில்லை. ராமுவுக்காகப் பெண் பார்க்க வந்ததும், ஊருக்குப் புறப்பட்டபொழுது கமலாவின் விசாலமான விழிகள் தம் நயன பாஷையில், ''போய் வாருங்கள், நமஸ்காரம்!'' என்று விடை கொடுத்தனுப்பியதும் நினைவுக்கு வரவே, அவள் கன்னிப் பெண்ணாக இருப்பதன் காரணம் கோபுவுக்கு விளங்கி விட்டது. அடுத்த நிமிஷம் தான் இருப்பது பூலோகமா கைலாசமா என்ற மகிழ்ச்சி மயக்கத்தில் மூழ்கி விட்டான்.

வேண்டுமென்றே ஒரு சொம்புத் தண்ணீரையும் குடித்து விட்டு மீண்டும் கோபு தண்ணீர் கேட்டபோது, இதுவரை கல்யாணமே வேண்டாமென்று சொல்லிக் கொண்டிருந்த அந்தக் கன்னிப் பெண் அதற்குள் வேறு புடவை மாற்றிக் கொண்டு தண்ணீர் கொண்டு வந்து வைத்தாள்.

சில நாட்களுக்கெல்லாம் பிரமாதமான ஆடம்பரங்களுடன் மீண்டும் ஒரு கல்யாணம் பனையூர் பிராகசதாரின் வீட்டில் நடந்தது என்பது ஒருவருக்குச் சொல்லியா தெரிய வேண்டும்!

# கீதா மோகம்

**பரதேசி**

"இந்தப் பெண்ணுக்குப் பைத்தியம் பிடித்து விடுமோ என்னமோ, தெரியவில்லையே! எப்போது பார்த்தாலும் கீதையிலிருந்து மேற்கோள் எடுத்துச் சொல்ல ஆரம்பித்து விடுகிறதே!" என்று அங்கலாய்த்தாள் சீதாலட்சுமியம்மாள்.

"நீ புதுமையாயிருக்கட்டும் என்று 'கீதா' என்று பெயர் வைத்ததனால்தான் அவள் இப்படி 'கீதா'மோகம் பிடித்து அலைகிறாள் என்று எண்ணுகிறேன். ஆமாம், இப்போது எங்கே அவள்?" என்று கேட்டார் லட்சுமீபதி.

"கீதை உபந்யாசம் கேட்கத்தான் போயிருக்கிறாள்!"

"அமாம், இந்த இளம் பெண்களுக்கெல்லாம் கீதையில் எப்படி மனம் லயிக்கிறது?"

"அதென்னவோ, அவளைத்தான் கேட்க வேணும். அது சரி, இந்தக் தடவையாவது அவளுக்கு ஒரு வரனை நிச்சயிக்க வேண்டாமா? மேலே படிக்கத்தான் வைக்கவில்லை, கல்யாணத்தையாவது செய்து வைத்து விட்டால்தானே நல்லது!"

"நான் என்ன செய்வது? எல்லாம் காலம் வந்தால் உன்னையும் என்னையும் கேட்டுக் கொண்டா வரப் போகிறது? எல்லாம் தன்னாலே நடந்து விடுகிறது!"

இதே சமயத்தில் அவர் கடைசியாகச் சொன்னதைக் கேட்டபடியே கீதா உள்ளே நுழைந்தாள். "ஆமாம், அப்பா! எது நடப்பதாயிருந்தாலும் தன்னாலே நடந்து விடும். கீதையில் கிருஷ்ண பரமாத்மா கூட அப்படித்தான் சொல்லி இருக்கிறார்."

லட்சுமீபதி சிரித்தபடியே கீதாவை அருகிலழைத்தார். தம் அருமைப் பெண்ணின் தலையை வருடிய படியே, "கீதா! நான் கேட்கிறேன் என்று கோபித்துக் கொள்ளாதே! இந்தச் சின்ன வயதில் உனக்கு ஏன் கீதையும் ராமாயணமும்? நீ எங்கேயாவது வாழ்க்கையை வெறுத்து 'பால யோகினி' யாகி விடுவாயோ என்று அம்மா பயப்படுகிறாளே!" என்று கேட்டார் பாதி வருத்தமும் பாதி மகிழ்ச்சியும் தாண்டவமாட.

"இல்லையப்பா! ஆனாலும் இந்த அம்மா சுத்த மோசமப்பா! இவ்வளவு வயதாகியும் இவளுக்கு அக்ஞானம் விடவில்லையே! இந்த உடம்பில் ஏன் அப்பா அபிமானம் வைக்க வேண்டும்? கிருஷ்ண பரமாத்மா என்ன சொல்கிறார், தெரியுமா? இந்த உடம்பு ஆடையைப் போன்றதாம்! அழுக்கடைந்து கிழிந்த ஆடைகளைக் களைந்து விட்டு மனிதன் புத்தாடையணிவது போல் தூய ஆத்மா வெவ்வேறு உடல்களை அணிகிறதாம்!"

"அது சரி, கீதா! நீ சொல்வது எனக்குப் புரிகிறது! அம்மாவுக்கு இதெல்லாம் எப்படிப் புரியும்? ஆனால் நீ இனிமேல் அம்மாவின் மனம் புண்படும்படி நடந்து கொள்ளக் கூடாது. ஏனெனில் கீதையில் தாயை விடச் சிறந்த தெய்வமில்லை என்றுகூடச் சொல்லியிருக்கிறது!"

"கீதையில் எங்கேயப்பா அப்படிச் சொல்லியிருக்கிறது?"

"கீதையில் இல்லாவிட்டால் ராமாயணத்தில் சொல்லியிருக்கலாம்!"

"எனக்கு ராமாயணம் தெரியாதா, என்ன? அந்த மாதிரி எங்கே சொல்லியிருக்கிறது?"

"ராமாயணத்தில் சொல்லாவிட்டால் என்ன? வேறு எங்கேயோ 'நமாது : பரம் தைவதம்' என்று சொல்லியிருக்கிறது. அவ்வளவு தூரம் போவானேன்? 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்பது உனக்குத் தெரியாதா, என்ன? நீதான் சமர்த்துப் பெண் ஆயிற்றே! ஆகவே, சமர்த்தாக அம்மா சொற்படி நடக்க வேண்டும்!"

"அம்மா என்னைக் கீதை உபந்யாசத்துக்குப் போக வேண்டாமென்கிறாள். அதற்காக நான் போகாமலிருந்து விடுவதா?"

"அம்மா அப்படிச் சொன்னால் கேட்க வேண்டியதுதான்! அம்மாவுக்கு அடுத்தபடியாக நான் சொல்லுவதையும் நீ கேட்க வேண்டியதுதான்! என்ன, தெரிந்ததா?"



"அப்பா! அம்மாவும் நீயும் வேறு என்ன வேண்டுமானாலும் சொல்லுங்கள், கேட்கிறேன்! ஆனால் கீதைக்குப் போக வேண்டாமென்று மட்டும் தடுத்து விடாதீர்கள்!" என்று கெஞ்சினாள் கீதா.

அதைக் கேட்டு அவரும் போனால் போகட்டுமென்று அத்துடன் விட்டு விட்டார்.

## 2

சன்மார்க்க தர்சினி சபையின் காரியதரிசி தங்கள் சபைக்கு வந்து கீதை உபதேசம் கேட்காமல் வீட்டிலிருந்தபடியே ஏமாற்றி வருகிறவர்களிடம் சந்தா வசூலிக்க ஒரு திட்டம் வகுத்தார். அந்தத் திட்டத்தின்படி தங்கள் சபைக்கு வரும்

இளம் பெண்களையும் வாலிபர்களையும் அணி அணியாகப் பிரித்துக் கையில் உண்டியலும் ரசீதுப் புத்தகமும் கொடுத்து வீடு வீடாக வீதி வீதியாக அனுப்பினார். கீதாவும் அந்தக் கோஷ்டியில் சேர விரும்பினாள். ஆனால் இதற்கு அம்மாவிடமோ அப்பாவிடமோ அனுமதி பெற வேண்டுமே! அனுமதி கொடுப்பார்களா? விவாகமாக வேண்டிய பெண் வீடு வீடாக உண்டியலை எடுத்துக் கொண்டு அலைவதென்றால் அதை அந்தக் கிருஷ்ண பரமாத்மாகூட விரும்ப மாட்டாரே!

கீதா சிந்தை யுருவானாள். அவளுக்கு அப்புறம் காப்பியும் பிடிக்கவில்லை; பசியும் எடுக்கவில்லை.

"பசிக்காமல் அப்படி என்ன தின்று விட்டாய்? மோருஞ்சாதமாவது சாப்பிட்டு விட்டுப்போ!" என்று லட்சுமி யம்மாள் அவளை மிகவும் கடிந்து கொண்டாள்.

"அம்மா!..."

"என்னது அம்மா! வரவரக் குழந்தையாகத்தான் 'கொஞ்சுகிறாய்!"

"நீதான் கோபித்துக் கொள்ளுகிறாயே!"

"இல்லை, சொல்லியழு! என்ன வேண்டுமோ, வாயை விட்டுச் சொல்லு!"

"எனக்கு ஒரு நாள் 'லீவு' வேண்டும்!"

"லீவா? இதென்ன கூத்து? எங்கே போகப் போகிறாய்?"

"எங்கேயுமில்லை! இதே ஊரில்தானிருக்கப் போகிறேன். சன்மார்க்க தர்சினி சபையின் விசேஷ கைங்கர்யத்தில் ஈடுபடப் போகிறேன்!" என்றாள் கீதா.

"என்ன வேண்டுமானாலும் பண்ணிக் கொள்! வர வர உனக்கு இப்படி ஏன் புத்தி போகிறதோ, தெரியவில்லை! ஆனால் ஒன்று.



ராத்திரி எட்டு மணிக்குள் திரும்பி வந்து விட வேண்டும். புரிந்ததா?—ஆமாம், அந்தச் சபையில் இன்றைக்கு என்ன விசேஷம்?"

"அதெல்லாம் அப்புறம் வந்து சொல்லுகிறேன். எனக்குச் சாதம் போடு! அப்பா வருவதற்குள் நான் புறப்பட வேண்டும்."

"அப்பா வந்தாலென்ன? எல்லாம் என்னிடம்தான் சொல்லிக் கொண்டு விட்டாயே! போய் வா! அவர் ஒன்றும் உன்னைப் போக வேண்டாமென்று சொல்ல மாட்டார்! அவருக்குத்தான் உன்னைக் கொஞ்சமும் கோபிக்கவே மனம் வராதே!"

முயற்சியில் வெற்றி கொண்ட கீதா சாப்பாட்டை முடித்துக் கொண்டு சன்மார்க்க தர்சினி சபையை நோக்கி ஓட்டமாக ஓடினாள்!

## 3

"அடியே, சேதியைக் கேட்டியா?" என்று உச்சஸ்தாயியில் குரல் கொடுத்தபடியே லட்சுமீபதி வீட்டினுள் வந்தார்.

"கொஞ்சம் மெதுவாகவே சொல்லுங்கள். பக்கத்து வீட்டுக்குக் கேட்கப் போகிறது!" என்று சேதியைக் கேட்கும் உற்சாகத்தில் கரண்டியைக்கூடக் கீழே வைக்காமல் லட்சுமியம்மாள் ஓடி வந்தாள்.

"என்னமோ நம்ம கீதாவுக்குத் தான் பைத்தியம் பிடித்திருக்கிறதென்று நினைத்துக் கொண்டிருந்தோமே! ரிடையர்டு போஸ்டு மாஸ்டர் கமலபதி இல்லை?......அவர் கடைக்குட்டி மோகனுக்கும் கூடக் கிதைப் பைத்தியம் பிடித்திருக்கிறதாம்!"

"மோகனா?...மோகனுவா?..."

"மோகனுவுக்குப் பிடித்தால் நமக்கென்ன லாபம்? எல்லாம் மோகனுக்குத்தான் பிடித்திருக்கிறதாம். அந்தப் பயல் இண்டர் பரீட்சை எழுதினவன். மேலே படிக்க மாட்டேன் என்று சொல்லி விட்டானும்! அப்பாவின் சிபாரிசு பலத்தில் எங்கேயோ ஒரு கம்பெனியில் குமாஸ்தாவாகக் கூட வேலை பார்க்கிறானும்?"

"ஏன்? அப்பாவைப் போல் அவனும் தபால் இலாகாவிலேயே வேலை தேடிக் கொள்ளக் கூடாதோ?"

"அந்தப் பிடுங்கல் வேலை எனக்கு வேண்டாம். அடுத்த தெருவிலே போகிறவன் முக்காலணாச் செலவழித்து என் பேரில் புகார்க் கடிதம் எழுதினால் உடனே நான் சூப்பிரண்டெண்டுக்குப் பதில் சொல்லத் தயாராயிருக்க வேண்டும். எனக்கு ஒன்றும் அந்தமாதிரிச் சனியன் பிடித்த உத்தியோகம் வேண்டாம் என்று சொல்லி விட்டானும்."

"ஆமாம்! இப்போது அவன் என்ன சம்பாதிக்கிறானும்?"

"தொண்ணூற்று நாலு ரூபாய் பதினைக்தணு சம்பாதிக்கிறானும்!"

"இதென்ன அணுக் கணக்கு?"

"சொல்கிறேன், கேள்! பையன் ரொம்பவும் யோக்யனும்! ஒரணு ஸ்டாம்பில் கையெழுத்துப் போட்டு 94-15-0 சம்பளம் வாங்கினால் பஸ் சார்ஜுக்குக்கூட எடுத்துக் கொள்ளாமல் ஆபீசிலிருந்து நேரே நடந்து வந்து அப்பாவின் கையில் கொடுத்துவிட்டு நமஸ்காரம் செய்வானும்!"

"அட, அசட்டுப் பிள்ளையாண்டானே! உனக்கு வாழ்க்கைப் படுகிறவள் அதிர்ஷ்டசாலிதான்! ஆமாம், அந்தப் பையனின் ஜாதகத்தை வாங்கிக்கொண்டு வரக்கூடாதோ?"

"ஜாதகத்தை வாங்கிக் கொண்டு வந்து என்ன செய்கிறது? இவ்வளவு யோக்யதையுள்ள பிள்ளை 'கீதா மோகம்' பிடித்து அலைகிறானும்! எங்கே கீதை உபந்யாசமென்றாலும் அங்கே போய் உட்கார்ந்து விடுகிறானும்! அப்படியிருந்தும் இன்று வரை ஒரு நாள் கூட ஆபீசுக்கு லீவு போட்டதில்லையாம். அப்படிப் பிறந்த நாளுக்குக் கூட லீவு போடாத பையன் இன்று ஆபீசுக்கு லீவு போட்டுவிட்டு அப்பாவிடம் கெஞ்சிக் கூத்தாடி அனுமதி பெற்றுக் கொண்டு சன்மார்க்க தர்சினி சபையின் விசேஷ கைங்கரியத்தில் ஈடுபட்டிருக்கிறானும்!"

இதைக் கேட்டதும் லட்சுமியம்மாள் பெருமையில் பூரித்துப் போனாள்.

"அவன் மட்டும் என்ன ஒசத்தி? நம்ம கீதா கூடத்தான் இன்று என்னிடம் கேட்டுக் கொண்டு போயிருக்கிறான்!" என்றான்.



"என் ஆயுசுக்கும் இனிமேல் தான் எந்தப் பெண்ணையும் போய் என்னைக் கலியாணம் பண்ணிக் கொள் என்று கேட்க மாட்டேன்."

"ஏண்டாப்பா உனக்கு அவ்வளவு விரக்தி வந்து விட்டது? மருதாயி உன்னைக் கலியாணம் பண்ணிக் கொள்ள மாட்டேன் என்றாளே, அதற்காகவா?"

"இல்லை, பண்ணிக் கொள்வதாகச் சொல்லிவிட்டாள். அதனால்தான்..."

இப்படி அவன் சொல்லி முடித்ததுதான் தாமதம், வாசலில் கோஷ்டி கானம் கேட்டது-

அநந்யாச் சிந்தயந்தோ மாம்
யே ஜநா: பர்யு பாஸதே
தேஷாம் நித்யாபியுக்தானாம்
யோகக்ஷேமம் வஹாம்யஹம்"

என்ற சுலோகத்தைச் சொல்லிக் கொண்டு சிலர் உள்ளே நுழைந்தார்கள். லட்சுமியம்மாவும் லட்சுமீபதியும் ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டிருக்கும்போதே கீதாவும் ஒரு வாலிபனும் கையில் உண்டியலும் ரசீது புத்தகமுமாக வந்தார்கள்.

"அப்பா! அடுத்த வாரம் கீதை உபந்யாசம் முடிந்து விழாக் கொண்டாடப் போகிறோம்! ஒரு ரூபாயிலிருந்து எத்தனை வேண்டுமானாலும் உண்டியலில் செலுத்தி ரசீது பெறலாம்!" என்றாள் கீதா.

"உங்களைப் போன்றவர்கள் இம்மாதிரிக் கைங்கரியத்தில் அவசியம் பங்கு பெற வேண்டும்!" என்றான் அந்த வாலிபன்.

லட்சுமீபதி அந்த வாலிபனை ஒரு தடவை ஏற இறங்கப் பார்த்தார். லட்சுமியம்மாள் ஓடோடியும் உள்ளே சென்று மஞ்சள் நீர் கரைத்து வந்தாள்.

"ஏன், அப்பா! நீ கமலபதியின் பிள்ளை தானே? உன் அப்பாவிடம் இன்று உன்னைப் பற்றித்தான் அரை மணிநேரம் பேசிக்கொண்டிருந்தேன்" என்றார் லட்சுமீபதி.

"கீதா, இந்தப் பிள்ளையை உனக்கு முன்பே தெரியுமா? அதை அப்பொழுதே சொல்லியிருக்கக் கூடாதோ? இரண்டு பேரும் கிழக்கு முகமாக உங்கள் கோஷ்டியில் நில்லுங்கள்" என்றாள் லட்சுமியம்மாள்.

"இரு, இரு! அவசரப்படாதே! உண்டியலில் காணிக்கை செலுத்த வேண்டும்" என்று இரு பத்து ரூபாய் நோட்டுகளை மடித்து ஒரு நோட்டைத் தம் கையால் உண்டியலில் செலுத்திவிட்டு மற்றொரு நோட்டை லட்சுமியம்மாளின் கையால் உண்டியலில் செலுத்தச் செய்தார்.

"கீதோபந்யாசம் பரலோக வாழ்வுக்கு மட்டும் வழி காட்டுவதில்லை. இகலோக வாழ்வுக்கும் எவ்வளவோ பயன்படுகிறது" என்று கடைசி நாள் விழாவில் சுந்தரபாகவதர் சொன்னபோது கீதா எதிர்ப்புற வரிசையில் உட்கார்ந்து தன்னையே கவனித்துக் கொண்டிருக்கும் மோஹனை நோக்கிப் புன்னகை புரிந்தாள்.

அந்தப் புன்னகையில் தன் வாழ்வின் வெற்றியைக் கண்டு அவன் உள்ளம் பூரித்தான்.

அதேசமயம் கமலபதியின் காதில் லட்சுமீபதி, "அப்புறம் நீர் தகராறு செய்யக் கூடாது! ஐயாயிரத்துக்கு மேல் என்னால் காலணாக்கூடச் செலவழிக்க முடியாது!" என்று சொல்லிக் கொண்டிருந்தார்.




"எட்டு மாதங்களாக எனது கீழ் முதுகுப் பாகத்தில் பொறுக்க முடியாத வலி யிருந்தது. சில சமயங்களில் வலியின் கொடுமையால் என்னால் ஒன்றும் முடியாமலும், மிகுந்த க்ஷீணமாயும் இருந்தது. பிறகு "க்ருஷன்" உபயோகித்துப் பார்த்தேன். இரண்டு வாரங்களுக்குப் பின்னர் நான் ஒரு வேற்று மனிதனா யிருக்கிறேன். எனது வலி முழுதுமே விட்டொழிந்து விட்டது.—H.W.S.

மூத்திரக் காய்கள் சரிவரக் கழிவு பதார்த்தங்களை வெளியேற்ருவிடில், ரத்தக் குழாய்களில் விஷச் சத்துக்களில் சேமிக்கப்பட்டு அவை முதுகு வலியை உண்டாக்குகின்றன. "க்ருஷ"னின் ஆறுவித உப்புக்கள் மந்தித்துப்போன மூத்திரக் காய்களை மெதுவாகத் தூண்டி அவற்றைச் சரிவர இயக்கி ரத்தக் குழாய்களை சுத்தமாக்கச் செய்விக்கின்றன. தினந்தோறும் ஒரு சிறு அளவு "க்ருஷன்" உட்கொள்வது உங்களை முதுகு வலியினின்றும் விடுவிக்கும்.

**"க்ருஷன்"** உங்கள் ஆரோக்யத்திற்கும் ஆனந்தத்திற்கும் உற்ற உதவி

KSM - 6

# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரசாமி

## 33. ஆஸ்துமாவும், மூச்சுப் பயிற்சிகளும்

சென்ற அத்தியாயத்தில் ஆஸ்துமாவைப் போக்க வேண்டிய ஆசனங்கள் விவரிக்கப்பட்டது. அதனுடன் சில மூச்சுப் பயிற்சிகளும் செய்து வந்தால் ஆஸ்துமா மிக சீக்கிரம் குணமாகும்.

மூச்சுப் பயிற்சிகள் பல உண்டு. எல்லாம் பிராணாயாமத்தின் பல பிரிவுகளே. பொதுவாய்ப் பிராணாயாமமானது மனிதனின் லக்ஷ்யப் பாதைக்கு அழைத்துச் செல்லும் மிக உன்னத மார்க்கமானாலும், வாழ்க்கையில் ஏற்படும் பல இன்னல்களை அவ்வப்போது தீர்க்க அதைப் பல வித முறைகளாக வகுத்திருக்கின்றனர். எப்படி இன்ன வியாதிக்கு இன்ன ஆசனம் செய்தால் குணமாகும் என்று இருக்கிறதோ அதைப் போல் பிராணாயாமத்திலும் இன்ன நோய்க்கு இன்னவித பிராணாயாமம் செய்தால் குணமாகு மென்று இருக்கிறது. மனிதன் எப்பொழுதும் ஒரே இடத்தில் இருந்து ஒரே மாதிரியாய் வாழ முடியாது. அந்தந்த சீதோஷ்ண நிலைக்குத் தக்கபடி உடலும் மாறுதல் கொள்ளும். அதை அறிந்து அவ்வப்போது உடலைச் சரி செய்து கொள்ள நமது யோகிகள் மிக அற்புதமான சாதனைகள் எல்லாம் கண்டுபிடித்திருக்கின்றனர். உடல் உஷ்ணமானால் அதைக் குளிரச் செய்யச் சில பிராணாயாமங்கள் இருக்கின்றன. உடல் குளிர்ச்சி அடைந்து விட்டால் உஷ்ணமாக்கச் சிலவித பிராணாயாமங்களுண்டு. ஒரு பாலை வனத்தில் அல்லது குடிக்க ஜலமே கிடைக்காத ஒரு காட்டைக் கடக்கிறோம் என்று வைத்துக் கொள்வோம். தாகம் நாக்கை வறட்டுகிறது. பொறுக்க முடியவில்லை. அப்பொழுது கூட தாகம் எடுக்காமல் பல மைல்கள் நடக்கக்கூடிய சக்தியைத் தரும் பிராணாயாமம் இருக்கிறது. இன்னும் வாழ்க்கையில் எதிர்ப்படும் பலவித நோய்களை வென்று சுகமாக வாழவும் பிராணாயாமம் உதவுகிறது. இத்தனைக்கும் மேலாக மனிதன் தன் குண்டலினி சக்தியை எழுப்பிப் பிரம்ம சாக்ஷாத்காரத்தில் ஆனந்தமாய்ப் பேரின்ப சுகத்தை அனுபவிக்கவும் பிராணாயாமம் உதவுகிறது. எனவே பிராணாயாமமானது நமது வாழ்க்கையில் மிக இன்றியமையாதது.

ஆஸ்துமாவிற்கு முக்கியமாக 'உஜ்ஜயி', 'கபால பாதி', 'பஸ்திரிகா' என்ற பிராணாயாமப் பயிற்சிகள் ஏற்றவை. இவை எல்லாமுமே ஒரே தடவையில் செய்யவேண்டியதில்லை. முதலில் உஜ்ஜயி சில நாட்கள் செய்யலாம். பின் கபாலபாதி சில நாட்கள் செய்யலாம். பின் பஸ்திரிகா செய்யலாம்.

### செய்யும் விதம்

இப் பயிற்சிகளைச் செய்யப் பத்மாசனத்தில் உட்காருவது நல்லது. வீராசனத்தில் உட்காரலாம். அப்படியும் உட்கார முடியாதவர்கள் சாதாரணமாய் நாம் உட்காருவதைப்போல சுகாசனத்திலும் உட்காரலாம். முதுகெலும்பு, கழுத்து, சிரசு இவை மட்டும் நேராய் நிமிர்ந்திருக்க வேண்டும். சுத்தமான காற்றுள்ள இடமாய் இருக்க வேண்டும். அமைதியான இடமாய் இருந்தால் இன்னமும் சிலாக்கியமே. சுத்தமான காற்றும், வெளிச்சமுமுள்ள பூஜை அறையாய் இருந்தால் மிக உத்தமம். சௌகரியமில்லாவிட்டாலும் சுத்தமான காற்றுள்ள இடமாயிருப்பது அவசியம்.

● உஜ்ஜயி: நேராய் நிமிர்ந்து உட்காரவும், வாயை நன்கு மூடிக் கொள்ளவும். இரண்டு மூக்குத் துவாரங்களின் வழியாய் மூச்சை மெதுவாய் இழுக்கவும். மூச்சை இழுக்கும் போது, உள் தொண்டையில் லேசாய் சத்தம் உண்டாகும் வண்ணம் 'இஸ்' என்ற சத்தத்துடன் காற்று இழுக்க வேண்டும். இதைக் கவனித்து ஒரே நிதானமாய்ச் செய்ய வேண்டும். மார்பை விரித்து நுரை ஈரல் நிறையக் கொள்ளு மட்டும் மூச்சை இழுத்து நிரப்பவும். பிறகு முடிந்த மட்டும் அப்படியே மூச்சை நிறுத்தவும். கஷ்டப் பட்டு அதிக நேரம் நிறுத்தக்கூடாது. கஷ்ட மில்லாமல் எவ்வளவு நேரம் நிறுத்த முடியுமோ நிறுத்தவும். பிறகு மெதுவாய் மூச்சை அடக்கினபடி வெளியில் விடவும். இல்லையானால், "புஸ்" என்று மூச்சு வெளியில் சென்றுவிடும். மூச்சை அடைத்து வைத்து இருப்பதற்குக் கும்பகம் என்பது பெயர். கும்பகம் செய்யும் போது மூக்குத் துவாரங்களைக் கைவிரல்களால் மூடிக் கொண்டால் சிறிது கூட மூச்சு வெளியேறாமல் இருக்க உதவும். ஆரம்ப சாதகர்கள் இப்படிச் செய்வது நல்லது.

இதை ஆரம்பத்தில் ஏழு தடவையும். பிறகு வாரத்துக்கு இரண்டு தடவை அதிகமாக்கி வந்து இருபது இருபத்தைந்து தடவைகள் வரை செய்யலாம். இதைக் காலை மாலை தவறாமல் செய்ய வேண்டும். இது அவ்வளவு கஷ்டமான பிராணாயாமம் அல்ல. ஆகையால் மற்ற நேரங்களிலும் செய்யலாம். ஆஸ்துமாக்காரர்கள் ஒரு நாளைக்கு நான்கு ஐந்து தடவைகள் கூடச் செய்யலாம். இந்தப் பயிற்சி மட்டும் நாற்காலியில் உட்கார்ந்தவாறும், நின்றபடியும் கூடச் செய்யலாம்.

கபாலபாதி:—இதில் மூச்சை வேகமாய் இழுக்கவும் விடவும் செய்ய வேண்டும். இதைச் சீக்கிரம் சீக்கிரமாகவும் செய்ய வேண்டும். இதில் மூச்சை இழுப்பதும் விடுவதும் ஒரு வினாடியில் முடிந்துவிட வேண்டும். ஒரு வினாடியில் ஒரு தடவை மூச்சை இழுக்கவும் விடவும் செய்ய வேண்டும். இதில் மூச்சை வெளிவிடுவதை முக்கியமாய்க் கவனிக்க வேண்டும். ஒரு மூச்சுக்கும் மறு மூச்சுக்கு மிடையில் ஒரு ஒழுங்கான கால வரையறையுடன் ஒரே நிதானமாய், ஒரே அளவாய்ச் செய்ய வேண்டும். சில சமயம் வேகம் குறைவாகவும் சில சமயம் வேகமாகவும் செய்யக் கூடாது. மூச்சை இழுப்பதை விட விடுவதில் வேகம் அதிகம் செலுத்த வேண்டும். இவ்வாறு ஆரம்பத்தில் பத்து தடவை செய்யலாம். பின் இரண்டு மூன்று மூச்சுகளை சாதாரணமாக இழுத்துவிட்டு மறுபடி பத்து தடவை செய்யலாம். இம்மாதிரி ஆரம்பத்தில் முதல் வாரத்தில் காலையில் மட்டும் செய்தால் போதும். இரண்டாவது வாரத்தில் காலை மாலை இரண்டு வேளையும் செய்யலாம். மூன்றாவது வாரத்திலிருந்து ஒரு தடவையில் பத்து மூச்சு வாங்கி விடுவதை இருபது ஆக்கலாம். இவ்வாறே வாரத்துக்குத் தடவைக்குப் பத்து எண்ணிக்கை அதிகமாக்கி வந்து ஒரு தடவைக்கு அறுபது எண்ணிக்கை வரை செய்து இம்மாதிரி மூன்று தடவைகள் செய்தால் போதும்.

பஸ்திரிகா:—உஜ்ஜயி, கபாலபாதி இரண்டும் கலந்ததே பஸ்திரிகாவாகும். பஸ்திரிகா செய்ய ஆரம்பித்தபின் நோயாளிகள் உஜ்ஜயி, கபாலபதி

செய்ய வேண்டிய அவசியமில்லை. துருத்தி எவ்வாறு 'புஸ்' 'புஸ்' என்று காற்றை வெளிப்படுத்துகின்றதோ அதைப்போல வேகமாய்க் காற்றை இழுத்து வெளியில் விட வேண்டும். காற்றை வெளியில் விடும்போது பூரணமாய் வேகத்துடன் வெளியேற்ற வேண்டும். இவ்வாறு ஒரு வினாடிக்கு ஒன்று வீதம் இருபது தடவை செய்ய வேண்டும். பின் எவ்வளவு மூச்சை உள்ளுக்குக் கொள்ள முடியுமோ அவ்வளவையும் மிக லேசாய் நிதானமாய் இழுத்து நுரை ஈரலை நிரப்பிக் கும்பகம் செய்யவும். ஆரம்ப சாதகர்கள் கும்பகம் செய்யும்போது வலது கை விரல்களால் மூக்குத் துவாரங்களை அடைத்துக் கொள்ளலாம். கஷ்டமில்லாமல் முடிந்த நேரம் கும்பகத்தில் இருந்து பின் நிதானமாய் மூச்சைப் பூரணமாய் வெளியில் விடவும். இப்படிச் செய்தால் ஒரு பஸ்திரிகா செய்ததாகும். பிறகு சில சாதாரண மூச்சுகளை விட்டுக் கொண்டு அரை நிமிடமோ ஒரு நிமிடமோ அவர்களுக்கு வேண்டிய நேரம் ஓய்வெடுத்துக் கொண்டு மறுபடி பஸ்திரிகா செய்யலாம். இம்மாதிரி மூன்று தடவை செய்யலாம். இது மிகவும் உஷ்ணத்தைப் பிராண சக்தியைக் கொடுக்கும் பயிற்சியானதினால் அதிகாலையில் மாத்திரம் செய்யலாம். சந்தியா செய்யும்போதும் செய்யலாம். நோயாளிகள் இதைச் செய்யும்போது களைப்பு ஏற்பட்டால் உடனே நிறுத்தி விட்டு, ஓய்வெடுத்துக் கொண்டு களைப்பு நீங்கிய பின் மறுபடி செய்யலாம். நோயாளிகள் இவ்வளவு செய்தால் போதும். குளிர் காலத்தில் காலை மாலையும், வெய்யில் காலத்தில் அதிகாலையில் மட்டும் செய்யலாம்.

மெதுவாய் எந்த மூச்சுப் பயிற்சிகளைச் செய்தாலும் முது கெலும்பு, கழுத்து, சிரசு இவைகளை நேராய் வைத்திருக்க வேண்டும், வாய் மூடியிருக்க வேண்டும். வாயின் வழியே சுவாசத்தை இழுக்கவும் விடவும் கூடாது. மூக்கின் வழியே தான் சுவாசிக்க வேண்டும்.

## பலன்கள்

இப் பயிற்சிகள் எல்லாருமே-ஆஸ்துமாக்காரர்களுக்கு மட்டு மல்ல. மூச்சு சம்பந்தமாகவும், நுரை ஈரல் சம்பந்தமாகவும், குறையுள்ள சகல நோயாளிகளும், செய்யலாம். முக்கியமாய் க்ஷயத்துக்கு இவை மிகச் சிறந்தவையாம். மற்றும் பீனிசம், மூக்கில் சதை வளர்தல், ஜலதோஷம், இருமல் முதலிய சகலவற்றிற்கும் சிறந்தது.

உஜ்ஜயி: தலை உஷ்ணம் விலகும். அழகேற்படும். முகத்தில் தேஜஸ் உண்டாகும். இருமல், க்ஷயம் முதலிய சகல நுரை ஈரல் சம்பந்தமான வியாதிகளும் விலகும். பலஹீனத்தைப் போக்கும். உஜ்ஜயி செய்யும்போது ஒரு வித சத்தம் உண்டாவதனால் குரல்வளை சந்துகள், காற்றுக் குழாய் உள் சுவர்கள் சுறு சுறுப்படைந்து ஆரோக்கியமடைகின்றன.

கபாலபாதி: இது செய்வதனால் தசைகள், தசை நார்கள், நரம்புகள், நரம்புச் சக்கரங்கள், எலும்புகள், எலும்பைச் சேர்ந்த பொருள்கள் முதல், உடலிலுள்ள பரம அணுக்கள்வரை பிராணனால் தூண்டப்படுகின்றன. சுவாசக் குழாய்கள், நாசித் துவாரங்கள் சுத்தமாக்கப் படுகின்றன. சகலவித மான கபரோகத்தையும் போக்கும். சுவாசக் குழாய்களின் அடைப்பையும் சுருக்கங்களையும் விலக்கும். இதனால் இருமல் சம்பந்தமான வியாதிகள் போகும். நுரை ஈரல்களின் சந்து பொந்துகளிலெல்லாம் பிராணவாயு தீவிரமாய்ப் பிரவேசிப்பதால், க்ஷயக்கிருமிகள் வசிக்க முடியாமல் மாண்டு விடுகின்றன. நுரை ஈரல் நன்கு விரிவடைந்து, மார்பு விரிவடைந்து அழகுண்டாகும். கரிமல வாயு நன்றாய் வெளியேற்றப் படுவதால் இரத்தம் சுத்தமடையும். இருதயம் ஒழுங்காய் நடைபெறும். காற்றுக் குழாய், ரத்தக் குழாய்கள் ஆகார மார்க்கங்கள் முதல் உடலில் உள்ள எல்லா பாகங்களும் ஆரோக்கிய மடையும்.

பஸ்திரிகா: இதைச் செய்பவர்களுக்கு நோயே அணுகாது. என்றும் ஆரோக்கியமாய் இருக்கலாம். கழுத்து வீக்கம், மந்தாக்கினி, பலஹீனம், மூக்கு சம்பந்த நோய்கள், மார்பு வலி, இருமல், க்ஷயம், ஆஸ்துமா முதலியன ஒழியும். அதிக பசி எடுக்கும். சகல இரத்திகளும் விலகும். கபத்தை ஒழிக்கும். வியாதிகளுக்கு மூலகாரணமான வாயு, பித்த கபத்தை அகற்றும். உடலுக்கு உஷ்ணமேற்படும். நாடி நரம்புகளை மிகத் தெளிவாய்ச் சுத்தமாய் வைத்திருக்கும். (தொடரும்)

* * * * * * * * * * * * * * * * * * * * *



மாயூரம் ஸ்ரீ அ. கோவிந்தசாமி (கௌன்சிலர் - கண்டிராக்டர்) அவர்களின் புதல்வி சரோஜினிக்கும் சிதம்பரம் வட்டம் சேதியூர் ஸ்ரீ எம். அப்பாரு அவர்களின் புதல்வன் ஸ்ரீ இளங்கோவனுக்கும் சென்ற மாதம் 29ல் மாயூரம் மணமகன் இல்லத்தில் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. திருமணத்துக்கு உறவினர்களும், நண்பர்களும், உள்ளூர் பிரமுகர்கள் பலரும் விஜயம் செய்து மணமக்களை ஆசீர்வதித்தனர். மணமக்களுக்கு ஏராளமான வாழ்த்துச் செய்திகள் வந்தன. வாழ்க சரோஜினி - இளங்கோவன்.

* * * * * * * * * * * * * * * * * * * * * *



● ● ● சென்ற மாதம் 28உ திருச்செந்தூரில் "ராஜாஜி சர்க்கார்" ஆதரவுக் கொண்டாட்டம் சிறப்பாக நடந்தது. ராஜாஜியின் திரு உருவப் படத்தை அலங்கரித்த ரதத்தில் வைத்து ஊர்வலம் விட்டார்கள். ஊர்வலத்தில் காருகுறிச்சி ஸ்ரீ கே. பி. அருணாசலம் அவர்களின் இனிமையான நாதஸ்வரக் கச்சேரி நடைபெற்றது. (ராஜாஜியின் உருவப் படத்தைத் தாங்கிய ரதம், நாதஸ்வர வித்வான் ஸ்ரீ கே. பி. அருணாசலம், தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினர் ஸ்ரீ எம். ஆர். மேகனாதன், நகர காங்கிரஸ் கமிட்டித் தலைவர் ஸ்ரீ டி. எஸ். சேதுபாண்டி ஐயர், அன்னதானம் செய்த ஸ்ரீ எம். கோவிந்த ஐயர் முதலியவர்களைப் படத்தில் காணலாம்.) ● ● ●






பாரதி காட்டிய பாதை

# உலகம் இனியது

கே. மீனாட்சி சுந்தரம்

வாழ்க்கையைக் குறித்து மக்கள் இரண்டு விதமான மனப் பான்மையை உடையவராக இருக்கின்றனர். எல்லாம் துன்ப மயம் எல்லாம் இன்ப மயம் என்பவையே அவை. உலகில் துன்பந்தான் மிகுதியாய் உண்டு இன்பம் சிறிதளவே என்பது தான் பலர் கொள்கை. ஒரு ரூபாயில் பதினைந் தணாத் துன்பமும் ஒரு அணா இன்பமும் கலந்திருக்கிறது என்று ஆங்கிலப் பழமொழி கூறுகிறது. உண்மையை உணர்பவர்கள் உலகில் நிறைந்த இன்பங்களைக் காண்கின்றனர். துன்பமுண்டு என்பதை உணர்ந்தாலும் சோர்வடையாமல் நின்றால் அவற்றைக் களையமுடியும் என்ற உறுதியான எண்ணத்தை நிறுவுகின்றனர். உணர்ச்சியூட்டி எழுச்சி கொள்ளச் செய்த பாரதி உலகை இன்ப மயமாகவே காண்கிறார். பாரத நாயகியின் திருக்கையால் "உலகின்பக் கேணி" என எழுதப்பட்டுள்ளது என்பதை எடுத்துரைக்கிறார் நம் அமரகவி. "எத்தனை கோடி யின்பம் வைத்தாய் இறைவா!" என்ற கவியைப் பாடுங்கால் நம்மை அறியாமல் உலகிலமைந்த இன்பங்கள் யாவற்றையும் நுகர்ந்து சுவைத்து இன்பத்தில் திளைக்கின்றோம். இயற்கை அழகினை அள்ளிப் பருகுகிறார். தனது வசன கவிதையில் "இவ்வுலகம் இனியது" எனத் தொடங்கி ஒவ்வொன்றையும் இனிய பொருளாகக் காணும்போது நம்மையும் மறந்து இனிக்கச் செய்கிறார். எனவே உலகம் இன்பம் நிறைந்ததே தவிர துன்பம் நிறைந்ததன்று என்பதைக் காட்டி உலகின்மீது வெறுப்புக் கொள்ளாது ஆசை கொள்ள வழி வகுக்கிறார்.

துன்பங்கள் எல்லாவற்றையும் எளிதில் போக்கி விடலாம். பாப்பாப் பாட்டிலும் ஆத்திச் சூடியிலும் அதைப் போக்குவதற்குரிய பாதையைக் காட்டுகிறார். "துன்பம் மறந்திடு" என்று ஆத்திச் சூடியில் கூறுகின்ற கருத்து எவ்வளவு உயர்ந்தது; சிறந்தது தெரியுமா!

"துன்பம் நெருங்கி வந்த போதும்—நாம்
சோர்ந்து விடலாகாது பாப்பா"

துன்பங்கள் நெருங்கி வரலாம். அதனால் அதைக் கண்டு சுருங்கிவிடக் கூடாது. ஏனெனில் "கெடுப்பது சோர்வு" என்கிறார் பாரதி. அது மட்டுமா கூறுகிறார்! விநாயகர் நான் மணி மாலையில் விநாயகரை என்ன வேண்டுகிறார்! கூர்ந்து கவனிக்க வேண்டும். இதோ அந்த வரிகள்:

"நமக்குத் தொழில் கவிதை நாட்டுக் குழைத்தல்
இமைப்பொழுதும் சோராதிருத்தல்—உமைக்கினிய
மைந்தன் கணநாதன் நங்குடியை வாழ்விப்பான்
சிந்தையே இம்மூன்றும் செய்."

நமக்குத் தொழில்கள் மூன்று என அறுதியிட்டுக் கொண்டு உறுதியாகச் சோராதிருத்தல் வேண்டுமென்பதனை அவற்றில் ஒன்றாக அமைத்துக் கணநாதனை வேண்டுகிறார். உழைக்க வேண்டும். தனக்கா! இல்லை. நாட்டுக்கு. உழைக்குங்கால் இமைப்பொழுது கூடச் சோராதிருத்தல் வேண்டும். பாருங்கள்: பரந்த உள்ளத்தோடு எவ்

வளவு தூரம் ஊக்கம் முயற்சி உற்சாகம் வேண்டுமென்பதை வலியுறுத்துகிறார் என்று.

செயலாற்றுங்கால் எவ்வளவோ துன்பங்கள் நெருங்கலாம். தோல்வியும் ஏற்படலாம். ஆனால் தோல்வியில் கலங்காது கேட்டினும் துணிந்து நின்று நொந்தது சாகுமென உணர்ந்து சிதையா நெஞ்சுகொண்டு சோராது தொழிலாற்ற வேண்டுமென்பதை அழகுற ஆத்திச் சூடியில் குறித்து அருமையான பாதை காட்டுகிறார்.

துன்பத்தை மறக்காமல் சோர்வுகொண்டு கவலையுடன் வாழ்பவன் கருகி, நைந்து. செத்தே தீருவான். நரகமும் முக்தியும் இங்கேயே இருக்கின்றன என்கிறார் பாரதியார்.

"கவலைப்படுதலே கருநரகம்மா
கவலையற்றிருத்தலே முக்தி"

பாரதி அறுபத்தாறில் மரணமில்லாமல் வாழலாம் என்கிறார் கவிஞர். விஞ்ஞானக் கண்ணை வெளிக் காட்டி உண்மையை எடுத்து இயம்புகிறார். "நாடியிலே அதிர்ச்சியினால் மரணம்" என்று "கோனுலிச் சாத்திரத்தை ஆளும் மாண் பார் ஜகதீச சந்திர வசு" கூறுகின்றார். இந்த நாடியதிர்ச்சிக்குக் காரணம் என்ன! "கவலையினால் நாடி எலாம் தழலாய் வேகும்" என்கிறார் ஆராய்ச்சிக் கவிஞர். எனவே "கொன்றழிக்கும் கவலைக்கு" "வஞ்சகக் கவலைக்கு" இடங்கொடுக்க வேண்டாம் என்று பறை சாற்றுகிறார். கற்றவர்களையும் அறிஞர்களையும் பார்த்துக் கடாவுகின்றார்.

"கற்றுத் தெளிந்த பின்னும் — நீவிரே
கவலைப்படலாகுமோ?"

எவ்வளவு அருமையாக படித்துப் பட்டம் பெற்ற அறிவாளிகளுக்கு அறிவுறுத்துகிறார் பாருங்கள் :

"நெஞ்சிற் கவலை நிதமும் பயிராக்கி
அஞ்சியுயிர் வாழ்தல் அறியாமை-தஞ்சமென்றே
வையமெலாங் காக்கு மகாசக்தி நல்லருளை
ஐயமறப் பற்றலறிவு"

அறிவையும் அறியாமையையும் அறிவுறுத்தியவர் வேத முடிவை வெளிப்படுத்துகிறார்.

கவலை துறந்திங்கு வாழ்வது வீடென்று
காட்டும் மறைகளெல்லாம் நீவிர்
அவலை நினைந்து உமிமென்றுதல் போலிங்கு
அவங்கள் புரிவீரோ"

இவ்வாறு விளக்கிய பாவரசர் கவலைதீர வழி வகுத்துக் காட்டுகிறார். கற்றதனாலாய பயன் வாலறிவனைத் தொழுதலன்றோ! அதைத்தானே அம்மகவி அறிவு என்கிறார். இறைவன் மேல் ஆசை கொள்ள வேண்டுமென்கிறார். இறைவன் இல்லை என்று பேசும் எக்காளர் கூட்டத்தைச் சேர்ந்தவர்களுக்குக் கவலை போக வழியே இல்லை. நம்பிக்கையில்லாதவர்களுக்கு நம் கவியிடம் இடமே இல்லை. பாப்பாப் பாட்டில் இதை அழுத்தத் திருத்தமாக அழகுறச் சொல்லுகின்றார்.

"அன்பு மிகுந்த தெய்வ முண்டு—துன்பம்
அத்தனையும் போக்கிவிடும் பாப்பா"

ஆகவே கவலையைப் போக்க இறை நம்பிக்கை வேண்டும். அந்நம்பிக்கை குறைந்து சோர்வடைந்து கவலையுற்று வாழ்கின்ற இளைஞர்களுக்கு எவ்வளவு துணை செய்கிறது தெரியுமா!

கவலையுற்று, சோர்வுற்று, ஊக்கமின்றி, உளவலியின்றி, உண்மையில் பற்றின்றிக் கிடப்பவர்களைப் பார்த்து மிகவும் கண்டனமாக இடித்துரைக்கின்றார் இடிபோன்ற பாரதியார். ஏதோ



பிரக்யாதி பெற்ற

# ஆஸ்டிரிய தயாரிப்பு

(8, 10, 15 & 20 எச். பி.)




# ஜேன்பாக்

டீசல் என்ஜின்கள்

★ ஹரிசாண்டல்

★ கோல்ட் ஸ்டார்ட்

★ போர் ஸ்ட்ரோக்

எண்ணைச் செலவில் சிக்கனம்

★

விவரங்களுக்கு :

**கமானி என்ஜினீயரிங் கார்ப்பொரேஷன் லிட்.**

கமானி சேம்பர்ஸ்,
பலார்டு எஸ்டேட், பம்பாய்

விற்பனையாளர்கள் :

**கமானி என்ஜினியரிங் கார்ப்பொரேஷன் லிமிடெட்**

"சாகர் மான்ஷன்"
நெ. 2, ஜோன்ஸ் தெரு,
பிராட்வே, மதராஸ் - 1

---

**மூன்று கடிகார ஆர்டருக்கு ஒன்று இனாம்!**

உயர் ரக ஜீவல் வாட்சுகள், சுவிஸ் தயாரிப்பு. 5 வருஷ உத்தரவாதம். இதுவரை இக் குறைந்த விலைக்குக் கொடுத்ததில்லை. ஸ்டாக்குகள் சொற்பமே உள்ளன.

**இலவசம்** மூன்று வாட்சுகள் ஆர்டருக்கு ஒரு கைக்கடிகாரமும் இரண்டுக்கு ஒரு லோலாக்கு செயின் பவுண்டன் பேனாவும் ஒரு கடிகாரத்துக்கு ஒரு பிளாஸ்டிக் பவுண்டன் பேனாவும் இனாம். மேலும் ஒரு வெல்வெட் பெட்டியும் அழகான ஸ்ட்ராப்பும் இனாம்.

**No. 1. Size 6½"**



| | | |
|---|---|---|
| 15 | ஜூவல்ஸ் ஸ்டீல்பேக் கேஸ் | ரூ. 38/- |
| 15 | ஜூவல்ஸ் ரோல்டுகோல்டு | ரூ. 40/- |

**No. 2. Size 6½"**



| | | |
|---|---|---|
| 15 | ஜூவல்ஸ் ஸ்டீல்பேக் | ரூ. 38/- |
| 15 | ஜூவல்ஸ் ரோல்டுகோல்டு | ரூ. 40/- |

**No. 3. Size 9½"**
**Water Proof**



| | | |
|---|---|---|
| 15 | ஜூவல்ஸ் க்ரோம் ஸ்டீல்பேக் | ரூ. 48/- |
| 15 | ஜூவல்ஸ் க்ரோம் உயர் ரகம் | ரூ. 52/- |
| 17 | ஜூவல்ஸ் க்ரோம் ஸ்டீல்பேக் | ரூ. 55/- |

**No. 4. Size 8½"**



| | | |
|---|---|---|
| 5 | ஜூவல்ஸ் ரோல்டுகோல்டு | ரூ. 32/- |
| 15 | ஜூவல்ஸ் க்ரோம் ஸ்டீல்பேக் | ரூ. 38/- |
| 15 | ஜூவல்ஸ் ரோல்டுகோல்டு | ரூ. 40/- |

**No. 5. Size 6¾"**



| | | |
|---|---|---|
| 13 | லைன் க்ரோம் கேஸ் | ரூ. 19/- |
| 5 | ஜூவல்ஸ் பிராந்த் ரோல்டுகோல்டு | ரூ. 25/- |
| 15 | ஜூவல்ஸ் க்ரோம் ஸ்டீல்பேக் | ரூ. 38/- |
| 15 | ஜூவல்ஸ் ரோல்டுகோல்டு | ரூ. 40/- |



| | |
|---|---|
| அலாரம் டைம்பீஸ் | ரூ. 19/- |
| உயர் ரகம் | ரூ. 21/- |
| பாக்கெட் வாட்ச் | ரூ. 13/- |

**PIONEER WATCH COMPANY**

Post Box No. 11428, CALCUTTA-?


உடம்பு வலியோ?
'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்
ASPRO
REG. TRADE MARK

# கண்டக்டர் முத்து

கே. ஏ. எஸ்.

திருநெல்வேலியிலிருந்து திருச்செந்தூர் மிகவும் சமீபம்தான் என்றாலும் சென்ற மாதம் வரையில் எனக்கு அது காசியைப் போல்தான் தென்பட்டிருக்கிறது. வருஷத்துக்கு ஒரு முறையாவது திருநெல்வேலிக்குப் போகும் நான் திருச்செந்தூருக்கு மட்டும் போனதில்லை. ஏன், அதைவிடச் சமீபத்தில் இருக்கும் ஆழ்வார் திருநகரிக்கே போகச் சந்தர்ப்பம் ஏற்பட்டதில்லை என்றால் பார்த்துக் கொள்ளலாம்.

சென்ற மாதம் வரையில் கற்பனையிலேயே திருச்செந்தூரைக் கண்டு வந்தேன். வாரத்துக்கு ஒரு முறை திருச்செந்தூர் போய் 'செந்தூரில் வளர்பவனை'த் தரிசித்து வரும் ஒரு நண்பர் என்னை வற்புறுத்தி வந்ததின் பேரில் ஒருநாள் கிளம்பினேன்.

கிருத்திகை நக்ஷத்திரம் வந்து விட்டால் திருநெல்வேலி ஜங்ஷனில் கூட்டம் சொல்லி முடியாது. வெள்ளிக் கிழமையன்று கிருத்திகை. எனவே புதன் கிழமை மாலையே கிளம்பி விட்டேன். வண்டியில் கூட்டம் அதிகம் இல்லை.

அன்றைக்கு எனக்குச் சீட்டாட்டத்தில் கிடைத்த பத்து ரூபாயை எடுத்துக் கொண்டு தான் பகவானைத் தரிசிக்கக் கிளம்பினேன். உண்மையைச் சொன்னால் என்னோடு சீட்டு விளையாடியவனை ஏமாற்றிய பத்து ரூபாயைக் கையில் வைத்துக் கொண்டுதான் கிளம்பினேன். அனேகமாக என் தொழிலே ஏறக்குறைய அப்படித்தான்.

ரயில் புறப்பட இரண்டு நிமிஷங்கள் இருக்கலாம். கதவு திடீரென்று திறந்தது. ஒரு கிழவர் அவசரமாக வந்து ஏறினார். என் எதிரில் உள்ள பெஞ்சியில் உட்கார்ந்தார்.

கிழவர் தம் இடுப்பிலிருந்து ஒரு சிறிய டப்பியை எடுத்தார். அதனுள்ளிருந்த விபூதியில் கொஞ்சம் எடுத்து என்னிடம் நீட்டினார்.

அதைக் கையில் வாங்கிக் கொண்டேன். கிழவர் என்னை உற்றுநோக்கினார். "தம்பி! நீயும் அப்படித்தானா? ரத்னம் மாதிரியா?"

"அப்படியென்றால்! ரத்னம் யார் பெரியவரே?" என்றேன் படபடப்போடு.

"அதிருக்கட்டும் நீ எங்கே போகிறாய்?"

"ஆழ்வார் திருநகரிக்குப் போய் விட்டு நாளை பிற்பகல் திருச்செந்தூருக்கு வருவேன்."

"நாளைக்கு வரவேண்டாம்! வெள்ளிக் கிழமை வா, தம்பி!" என்று சொன்ன கிழவர் தொடர்ந்து. "ரத்னமும் எத்தனைதரம் திருச்செந்தூர் வந்திருக்கிறான்? எதற்குத் தெரியுமா? சுவாமி தரிசனத்துக்கு அல்ல. நாடகம் பார்க்கத்தான்" என்றார் கிழவர். அவர் கண்களில் நீர் துளித்தது.

வண்டி ஒருதரம் உலுக்கிக் கொண்டு நின்றது. கிழவர் கண்களில் வழிந்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டார்.

"தம்பி! உனக்கு ரத்னத்தைத் தெரியாது! அவனைப் பற்றிச் சொல்லுகிறேன், கேள்!"

*　　　*　　　*

சுமார் பத்து வருஷங்களுக்கு முன்னால் நடந்தது இந்தச் சம்பவம்.

ரத்னம் 'நல்லப்பா பஸ் ஸர்வீஸில்' டிரைவராக இருந்தான். முத்து அங்கே ஒரு கண்டக்டர். இது ஒரு நல்ல ஜோடி.

திருநெல்வேலி—தென்காசி பாதைதான் இவர்கள் பஸ் போகும் பாதை.

முத்துவும் ரத்னமும் அசல் முத்து ரத்னம். ஆனால் இருவருக்கும் ஒரே ஒரு விஷயத்தில் தான் மனவேற்றுமை.

முத்துவுக்குச் சிறு வயதிலிருந்தே முருகனிடத்தில் ஒரு பக்தி. பொதுவாக ஏதாவது ஒரு கோயிலைக் கண்டால் அங்கு போய் சுவாமியைத் தரிசிக்காமலிருக்க மாட்டான்.

அவனும் ரத்னமும் அடுத்தடுத்த அறையில்தான் வசித்து வந்தனர்.



ரத்னத்தைப் போல் ஒரு பழுத்த நாஸ்திகன் இருக்கவே முடியாது. முத்துவின் பக்தி ரத்னத்தின் சிரிப்புக்குத் தூபம் போட்டது.



பத்து வருஷங்களுக்கு முன்னால் ஒரு ஞாயிற்றுக் கிழமை. தென்காசி பஸ் ஸ்டாண்டை விட்டுப் பஸ் புறப்பட்டது. பஸ்ஸில் இரண்டொருவர் தான் இருந்தார்கள். முத்து டிரைவர் ஸீட்டுக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்தான்.

"ரத்னம்! ஒரு விஷயம்" என்றான் முத்து.

ரத்னம் மிகுந்த பரிவுடன் "என்ன விஷயம், முத்து?" என்றான்.

"ராத்திரி எட்டரை மணிக்கெல்லாம் திருநெல்வேலி போய்விடலாம் இல்லையா?"

"ஆமாம்!"

"ஒரு ஐந்து ரூபாய் கடன் இருந்தால் கொடேன்! முதல் தேதி தருகிறேன்."

"அதற்கென்ன, முத்து! தருகிறேன். திருநெல்வேலியில்தான் பணம் இருக்கிறது" என்று சொல்லிவிட்டு, "எதற்காக இப்பொழுது திடீரென்று பணம் கேட்கிறாய்?" என்று கேட்டான்.

"நாளைக்கு நமக்கு லீவு இல்லையா, ரத்னம்? இருத்திகைக்குத் திருச்செந்தூருக்குப் போய்..." என்று ஆரம்பித்தான் முத்து.

ரத்னம் ஏளனமாகச் சிரித்தான்.

முத்துவின் முகம் கறுத்தது. பதில் பேசாமல் எழுந்து பின் பக்கம் போனான்.

தென்காசி மார்க்கெட்டில் பஸ் நின்றது. பலர் அங்கு ஏறினார்கள்.

ஒவ்வொருவர் இடத்துக்கும் சென்று "டிக்கெட் வாங்கி விட்டீர்களா?" என்று விசாரித்துக் கொண்டே வந்தான் முத்து.

சரிகை அங்கவஸ்திரக்காரர் ஒருவர் உட்கார்ந்து கொண்டிருந்தார்.

முத்துவைக் கண்டதும் ஒரு பத்து ரூபாய் நோட்டைக் கொடுத்து "சேர்மாதேவிக்கு ஒரு டிக்கெட் கொடு!" என்றார்.

"சில்லறை இல்லையே, ஸார்" என்றான் முத்து, தன் கையை விரித்துக் கொண்டே.

"சில்லறை பின்னால் கொடுத்துக் கொள்ளலாம். முதலில் டிக்கெட்டைக் கொடு" என்றார் சரிகை அங்கவஸ்திரக்காரர்.

ரூபாயைப் பெற்றுக் கொண்டு டிக்கெட்டைக் கொடுத்து விட்டு, முத்து பின்புறம் உள்ள தன்னுடைய ஸீட்டுக்குச் சென்றான்.

பஸ் வேகமாய்ப் போய்க் கொண்டிருந்தது. அம்பா சமுத்திரத்தில் நின்றதும் இறங்கிய ரத்னம் ஒரு டீக் கடைக்குள் நுழைந்தான்.

முத்து எங்குமே போகவில்லை. ரத்னத்தையே வெறிக்கப் பார்த்துக் கொண்டு மௌனமாக உட்கார்ந்திருந்தான்.

டிரைவர் ரத்னம் டீ குடித்து விட்டு வந்ததும் பஸ் புறப்பட்டது. அன்றைக்கு அசாத்யக் கூட்டம். அம்பாசமுத்திரத்திலிருந்து ரயிலில் திருநெல்வேலிக்குப் போவதைவிட பஸ்ஸில் போகும் பிரயாணிகள் தான் அதிகம். நல்ல கூட்டம் இங்கு. வண்டி நேராகச் சேர்மாதேவியை அடைந்தது. சேர்மாதேவி ஸ்டேஷனுக்கு முந்திய பஸ் நிறுத்தத்தில் சரிகை அங்கவஸ்திரக்காரர் இறங்கி விட்டார்.

பஸ் கிளம்பிவிட்டது. முத்துவுக்குத் 'திக்' கென்றது. அவருக்கு மீதி சில்லறை கொடுக்கவில்லை என்பது அவன் மனத்தை வியாகூலமடையச் செய்தது. பஸ்ஸை நிறுத்தி அவரைக் கூப்பிடலாமா என்று நினைத்தான். ஆனால் கணத்துக்குக் கணம் சரிகை வஸ்திரக்காரர் பின்னால் போய்க் கொண்டிருந்தார்.

சேர்மாதேவி ரயிலடிக்குப் பக்கத்தில் தான் பஸ் ஸ்டாண்ட். பெரிய ஸ்டாண்டாதலால் கூட்டம் நிறையவே இருக்கும்.

ரத்னம் இறங்கி "வா, முத்து! போய் காப்பி சாப்பிட்டு விட்டு வரலாம்" என்று கையைப் பற்றி இழுத்தான்.

முத்து மௌனமாகப் போனான். காப்பி டம்ளரிலும் சரிகை அங்கவஸ்திரக்காரர் உருவம்தான் நின்றது.

அவன் பத்து வருஷத்துக் கண்டக்டர் வாழ்க்கையில் இம்மாதிரி நடந்து கொண்டது கிடையாது. இந்த முறை அம்மாதிரி செய்தான். சரிகை அங்கவஸ்திரக்காரர் ஞாபக மறதிக்காரராக இருந்தால் அது முத்துவின் குற்றமா?

"என்னப்பா யோசனை? உம், கிளம்பு!" என்று சொல்லி ரத்னம் எழுந்தான்.

மணி சரியாக ஏழே முக்கால்.

"ஏன், ஸார்! யாராவது இங்கே ஏறினீர்களா? தயவுசெய்து டிக்கட் வாங்கிக் கொள்ளுங்கள்" என்று கூறிக்கொண்டே பஸ்ஸுக்குள் வந்தான் முத்து.

"திருச்செந்தூருக்கு ஒரு டிக்கெட் கொடு" என்றான் ஒரு சிறு பையன். பத்து வயதிருக்கும்; அவன் குரல் கணீரென்று கேட்டது.

முத்து அவனைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தான்.

ஓடிக் கொண்டிருந்த பஸ் திடீரென்று நின்றது. ரத்னமும் என்னென்னவோ செய்து பார்த்தான். கடைசியில் "வண்டிக்குள் இருப்பவர்கள் எல்லாம் கீழே இறங்கிக் கொஞ்சம் தள்ளுங்கள்" என்று கெஞ்சினான் முத்து.

வெளியே ஒரே இருட்டு. எல்லோரும் இறங்கினார்கள். பதினைந்து நிமிஷங்களுக்குப் பிறகு பஸ் மீண்டும் புறப்பட்டது.

"என்ன, கண்டக்டர்! எங்கே அந்தப் பையனைக் காணோம்?"

முத்துவுக்குத் தூக்கி வாரிப் போட்டது. டிக்கெட்டுக்குப் பணமே கொடுக்க வில்லை பையன். பஸ் உடனே நின்றது. முத்து கீழே இறங்கினான். பையனைக் காணவில்லை. ஓடியே போய் விட்டான் போலிருக்கிறது.

"ஏன், கண்டக்டர்! டிக்கெட்டுக்குப் பணமே வாங்கவில்லையோ விழிக்கிறதே! இதோ பார்! கீழே ஒரு டிக்கெட் கிடக்கிறது" என்று கூறிக் கொண்டே சிறு பையனின் பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஒருவர் டிக்கெட்டை முத்துவிடம் கொடுத்தார்.

முத்து டிக்கெட்டை வைப்பதற்காகப் பையைத் திறந்தான். பத்து ரூபாய் நோட்டு வெளியே தலையை நீட்டியது. தொடர்ந்து சரிகை அங்கவஸ்திரக்காரர் உருவமும் தென்பட்டது. "நாம் அவரிடம் சில்லறையைத் திருப்பிக் கொடுத்திருக்க வேண்டும்" என்று எண்ணமிட்டான் முத்து.

பஸ் ஜங்ஷனை அடைந்தது. நேரே மானேஜரிடம் சென்று நடந்ததை அதாவது பையனைப் பற்றிய கதையைச் சொன்னான் முத்து. முத்துவை அவருக்கு நன்றாகத் தெரியும். ஆகவே, அவனை அவர் நம்பினார்.

முத்துவும் ரத்னமும் ஒரு ஓட்டலில் சாப்பாட்டை முடித்துக் கொண்டார்கள். சரிகை அங்கவஸ்திரக்காரரைப் பற்றிய விஷயத்தை முத்து அப்பொழுது ரத்னத்திடம் கூறவில்லை.

சாப்பிடும் பொழுது ரத்னம், "முத்து, நானும் திருச்செந்தூருக்கு வருகிறேன் உன்னுடன். நாளை ராத்திரி திருச்செந்தூர் ஷண்முகா டாக்கீஸில் 'மனோரஞ்சிதம்' நடக்கப் போகிறது. பார்க்க வேண்டாமா?" என்றான்.

முத்து பதில் பேசவில்லை.

முன்பெல்லாம் இரவு ஒன்பதே முக்காலுக்கு ஜங்ஷனை விட்டுத் திருச்செந்தூருக்கு ஒரு ரயில் கிளம்பிக் கொண்டிருந்தது. அந்த ரயிலில்தான் முத்து உட்கார்ந்திருந்தான். ரத்னம் பிளாட்பாரத்தின் கோடியில் நின்று கொண்டிருந்தான். அன்று என்னவோ அதிகக் கூட்டம் இல்லை.

"இந்தாங்க, கண்டக்டர்!" என்று கணீரென்று ஒரு குரல் கேட்டது.

முத்து திடுக்கிட்டான். பிளாட்பாரத்தில் அந்தச் சிறுவன் நின்று கொண்டிருந்தான்.

"என்னங்க, கண்டக்டர்! சில்லறையை வாங்கிக் கொள்ளாமல் போய் விட்டீங்களே! நல்ல வேளை பின்னாலேயே ஒரு பஸ் வந்தது. அதில் வந்து விட்டேன். எப்படியும் உங்களைப் பார்க்கலாம் என்றுதான் வந்தேன்."

"வேண்டாம், தம்பி! சில்லறை வேண்டாம்! உன் டிக்கெட் கீழே கிடந்தது. மானேஜரிடம் காட்டி விட்டேன்."

"ஓகோ! டிக்கெட் கீழே கிடக்காமல் போயிருந்தால்...?"

"என்ன தம்பி! தலையா போய்விடும்? எட்டணாக் காசுதானே!"

"அது சரிதான்! ஒருவன் காசு எனக்கு வேண்டாம். 'ஒருவன் பணத்தை எடுத்துக் கொள்ளுவது மகா பாவம்! நீ எப்பொழுதாவது அப்படி வாங்கி யிருந்தால் திருப்பிக் கொடுத்து விடு' என்று என் அப்பா எனக்குச் சொல்லி யிருக்கிறார். எனவே இந்தப் பணத்தை நீங்கள் வாங்கிக் கொள்ளுங்கள்" என்று சொல்லி எட்டணாவைத் தூக்கி எறிந்து விட்டுப் பையன் ஓடி விட்டான்.

பையனின் வார்த்தைகள் முத்துவின் இதயத்தை என்னவோ செய்தன. அவன் சரிகை வேஷ்டிக்காரரிடம் கொடுக்காமலே இருந்த பத்து ரூபாய் அவன் மனக்கண் முன் வந்தது. தன் செய்கையை எண்ணி எண்ணி அவன் மனம் மிகவும் சஞ்சலப் பட்டது.

* * *

ஒரு மாதம் சென்ற பின் தென்காசியில் மீண்டும் அந்தச் சரிகை அங்கவஸ்திரக்காரர் ஏறினார். அவரைக் கண்டதும் முத்துவுக்கு அவருடைய பத்து ரூபாயைப்பற்றிச் சொல்லி விடலாமா என்று தோன்றியது. ஆனால் ஏனோ அவன் சொல்ல வில்லை.

அன்றைக்கு வீட்டுக்குப் போனபிறகு கூடச் சரிகை அங்கவஸ்திரக்காரரின் பத்து ரூபாயைப் பற்றி நினைவு மறக்கவில்லை.



உபாத்தியாயர்:—நான் சுத்த வீரனாகவே இறப்பேன் என்று பாபர் எந்தச் சண்டையில் சொன்னார்?

பையன்:—அவர் சொன்னது கடைசிச் சண்டையில் சார்!



"நாங்கள் 'யுத்த விளையாட்டு' விளையாடப் போகிறோம்!"

"சரி, சரி, ஒருவரோடு ஒருவர் சண்டை போடாமல் விளையாடுங்கள்!"

---

சிறுவன் சொன்ன வார்த்தைகள் நினைவுக்கு வந்தன. இருந்தாலும் 'நாமும் ஒரு ஏழைதானே?' என்று எண்ணி மனத்தைத் தேற்றிக் கொண்டான்.

டிரைவர் ரத்னத்திடம் இந்த நிகழ்ச்சியைச் சொல்லி மிகவும் வருந்தினான். முத்துவின் நிலையை உணராத ரத்தினம் அவனைப் பார்த்துக் கேலியாகச் சிரித்தான். "இதற்குத்தானா இப்படி வேதனைப் படுகிறாய்? அந்த சரிகை அங்கவஸ்திரக்காரனை எனக்குத் தெரியும். அவன் நல்ல பணக்காரன். நியாயமான வழியில் யாருமே தேவைக்கு அதிகமாகப் பணம் சேர்க்க முடியாது, அப்பனே! ஒவ்வொருவர் எத்தனை எத்தனையோ ரூபாய்களை ஏமாற்றி விட்டுச் சந்தோஷமாகச் சௌகரியமாக இருக்கிறார்கள். நீ இந்தப் பத்து ரூபாய்க்கு இப்படி வருந்துகிறாயே!" என்றான்.

"அது கிடக்கட்டும். அந்தப் பத்து ரூபாயை இப்பொழுது உன்னிடம் கொடுத்து விடுகிறேன். நீ எனக்காக அந்த ரூபாயை வைத்திருந்து சரிகை அங்கவஸ்திரக்காரரிடம் கொடுத்துவிட வேண்டும்" என்றான் முத்து.

'ஆகட்டும்' என்று சொல்லி ரூபாயைப் பெற்றுக் கொண்டான் ரத்தினம்.

*　　　*　　　*

மறு நாள் பிற்பகல் முத்து தன் அறையில் உட்கார்ந்து கொண்டிருந்தான்.

திடீரென்று அவனை மானேஜர் கூப்பிட்டார். மானேஜர் அவனுக்காக ஒரு கெட்ட செய்தியை வைத்துக் கொண்டிருந்தார்.

முத்துவிடம் "டிரைவர் ரத்னம் இந்த ஊர் ஆஸ்பத்திரியில் இருக்கிறானாம். உன்னைப் பார்க்க வேண்டும் என்று சொன்னானாம்! போய்ப் பார்த்து விட்டு வா" என்றார்.

முத்து ஆஸ்பத்திரிக்கு ஓடினான். ரத்னம் பிரக்ஞையற்ற நிலையில் இருந்தான்.

அங்கு இருந்த ரத்னத்தின் மற்றொரு தோழரிடமிருந்து முத்து விஷயங்களை அறிந்து கொண்டான்.

ரத்னம் முத்துவிடமிருந்து பத்து ரூபாயை வாங்கிக் கொண்டு போய் நாடகம் பார்த்தான். நாடகம் பார்த்து விட்டுத் திரும்பும் போது "பார்த்தீர்களா! யாருக்கோ சரிகை வேஷ்டிக்காரனிடம் கொடுக்கச் சொல்லி என் சிநேகிதன் பணத்தைக் கொடுத்தான். அது எவ்வளவு உபயோகமாகச் செலவு செய்துவிட்டேன் தெரியுமா?" என்றான்.

தூரத்தில் யாரோ சரிகை அங்க வஸ்திரத்தைப் போட்டுக் கொண்டு ஏளனமாகச் சிரித்தது அவன் காதில் விழுந்தது. திடுக்கிட்டுத் திரும்பினான். பின்னாலிருந்து வந்த லாரி அவனை இடித்துத் தள்ளி விட்டது. அப்படியே மூர்ச்சையாகி விட்டான்.

நடுவில் பிரக்ஞை வந்த பொழுது கண்ணை விழித்து 'முத்து எங்கே?' என்றவுடனே முத்துவுக்கு ஆள் வந்தது. மறுபடியும் பிரக்ஞையை இழந்தான்.

முத்துவின் கண்களில் நீர் அரும்பியது.

சிறிது நேரத்திற்கெல்லாம் ரத்னம் கண் விழித்தான். பரிதாபமாகப் பார்த்தான். அடுத்த கணம் அவன் தலை சாய்ந்தது.

*　　　*　　　*

கிழவனார் ஒரு பெருமூச்சு விட்டார். "பாவி! அவன் இறந்தான். ரத்னம் நல்லவன்தான், தம்பி! ஆனால்......" என்று வார்த்தையை முடிக்காமல் நிறுத்தி விட்டார்.

"நீங்கள்தானே அந்த முத்து!" என்று கிழவரைப் பார்த்துக் கேட்டேன். அவர் கையில் 'முத்து' என்று பச்சைக் குத்தியிருந்ததைப் படித்து விட்டுத்தான் கேட்டேன்.

பெரியவர் சற்றுநேரம் பதில் பேசவில்லை. பிறகு, "ஆமாம், அப்பா! நான்தான் முத்து!" என்றார். "தம்பி! கடைசிக்காலத்தில் எல்லோரும் கைவிட்டு விடுவார்கள். பிறரை ஏமாற்றிப் பிழைக்காமல் இருந்தால் நிம்மதியாகவாவது வாழலாம்" என்றார்

வண்டி ஒரு தரம் குலுக்கி விட்டு நின்றது. "ஆழ்வார் திருநகரி வந்து விட்டது! இறங்கு, தம்பி! நாளை மறுநாள் திருச்செந்தூருக்கு வா!" என்றார் கிழவர்.

எனக்குச் 'சரி' என்றது. அவர் வார்த்தைகள் என் மனத்தை மாற்றி விட்டன. நான் பிறரை ஏமாற்றாமல் உழைத்துப் பிழைக்க வேண்டும் என்று மனத்துக்குள் சபதம் எடுத்துக் கொண்டேன்.

மௌனமாகக் கீழே இறங்கினேன். வெள்ளிக்கிழமையன்று திருச்செந்தூர் போய் அன்று மாலையே திருநெல்வேலிக்கு வந்து விட்டேன். கிழவரைப் பிறகு நான் பார்க்கவில்லை. ஆனால் நான் இப்பொழுது மிகவும் நிம்மதியாக இருக்கிறேன். பிறரை ஏமாற்றும் வழக்கத்தை விட்டு விட்டேன். என் வாழ்வுக்கு நல்ல வழி காட்டிய கண்டக்டர் முத்துவை நான் இன்றைக்கும் மறக்கவில்லை.

Edited Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press 116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

# ஆரோக்கியத்தைப்பெற சமநிலை உணவை சாப்பிடுங்கள்




ஒவ்வொரு வகையான உணவும் வெவ்வேறு விதமான உணவுச்சத்துக்கள் அடங்கியதாயிருக்கிறது. அதனால்தான் ஆரோக்கியத்திற்கும், சக்திக்கும் மிக அவசியமான ஐந்துவகை உணவுச்சத்துக்களையும் பெற வெவ்வேறு உணவுப்பொருள்களை சாப்பிடவேண்டும். இதைதான் சமநிலை உணவு என்று கூறப்படுகிறது. ஆகவே சமநிலை உணவில் (1) விடமின்கள், (2) புரதசத்துக்கள், (3) தாதுப்பொருள்கள், (4) மாவுசத்துக்கள், (5) கொழுப்புகள் அடங்கியிருக்கவேண்டும். இந்த ஐந்து வகை சத்துக்களும் மிகவும் அவசியமானவை தான். நீடித்து நிற்கும் சக்தியை அளிக்கும் கொழுப்புகளிடையே மிக சௌகரியமானதும், ஊட்டமளிப்பதுமான ஒன்று டால்டா. எல்லா வித சமையல்களுக்கும் உகந்தது. சீல் செய்த டின்களில் எப்பொழுதும் புதிதாகவும் துப்புரவாகவும் உங்களுக்கு கிடைக்கிறது.

சமநிலை உணவைப்பற்றிய உபயோகமான
பூரண விவரங்கள்

*இலவசமாகத் தேவையானால் இன்றே—*
*அல்லது என்று வேண்டுமானாலும்—எழுதுங்கள்:*

ஸ்ரீ டால்டா அட்வைஸரி ஸர்வீஸ்

தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1

---

# சக்தியைப்பெற டால்டாவில் சமையுங்கள்



சமநிலை உணவில் உங்களுக்குத்தேவையான கொழுப்பை அளிக்கிறது

HVM. 175-30 TM

REGD. No. M. 4392
*Registered as a newspaper in Ceylon*